உ

# ஆனந்தபோதினி

ஒரு சிறந்த மாதாந்தத்
தமிழ்ச் சஞ்சிகை.



" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

(தொகுதி 17.)

பிரஜோற்பத்தி௵ ஆடி௴ முதல் ஆங்கீரஸ௵
ஆனி௴ வரையில்
1931௵ ஜுலை௴ முதல் 1932 ஜுன்௴ வரையில்


நா. முனிசாமி முதலியார்,
" ஆனந்தபோதினி " ஆபீஸ்,
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.





காலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0 } 1932. { தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

---

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "Ananda Bodhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*
THOTTAKADU HOUSE. } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, *now* Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini**." It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd,) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini,**" containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15.*

---

Dear Sir.

Your Tamil monthly entitled "**ANANDA BODHINI**"........................is written in *easy*, *clear* and *readable* style, *well-suited*, *particularly*, to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages **288** and **289**. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes. ... ... ... ... ... It is very much to be envied that there should be over **10000*** subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

Trivandrum,
21-1-17. } A. V. SUBRAMANIA AIYAR,
F.N. S.A. (Lon.), F.C.I. (Birm.)

---

* Now more than 20 Thousands.

# ஆனந்தபோதினி

## 17-ம் வருடத்திய விஷய அட்டவணை.

ஓம்

பரப்பிரஹ்மணே நம:


# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.





| தொகுதி | பிரஜோற்பத்திஷு ஆடிமீ கக | பகுதி |
|---|---|---|
| 17 | 1931ஷு ஜுலைமீ 16உ | 1 |


## கடவுள் வணக்கம்.

மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யலா முள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுறவேதனும்
துடியிட்ட வெவ்வினையை யேவினுன் பாவிநான்
தொடரிட்ட தொழில்களெல்லாம்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
தொண்டர்பணி செய்வதென்றோ
வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரில்
அரிவையோர் பரவைவாயி
லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
ளடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே. (1)

இரக்கமொடு பொறைநீத லறிவாசார
மில்லேனுன் நல்லோர்க ளீட்டங்கண்டால்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்சமெந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரியகல்லோ. (2)

எண்ணாத எண்ணமெலாம் எண்ணி யெண்ணி ஏழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(1) இதனால் தொண்டர்பணி செய்வது எப்போது என்றிரங்குகின்றார்.

(இ-ள்) பழமையாகிய செவ்விய தமிழ் மொழியின் அருமை குறித்து, திருவாரூரின்கண் அரிவையாகிய பரவையாரின் தலைவாயில்வரை திருவடிகளை வைத்து நடை நடந்தருளிய இறைவரது மூலமாகிய திருவடி இது, திருமுடியாகிய ஈறு இது என்று தெளிவித்த வேதங்களைப் பேசுகின்ற பச்சிளங் கிளியே! வளம் பொருந்திய தேவை நகருக்கு அரசியே! மலையாசனுக்கு இரு கண்மணி போன்று அவதரித்த—இமய மலையின்கண் வளர்ந்த—தாய் தந்தையரின் அன்பிற்குரிய புத்திரியாகிய இறைவியே! வறுமையாகிய வாழ்க்கையினால் உப்புவைத்த மட்கலம்போல் உடம்பெல்லாம் உள்ளுடைந்து, மிகுந்த செல்வரது தலைவாயிலையே வசிக்குமிடமாகக் கொண்டு, துன்பங்களையடையப் பிரமனும் பதை பதைத்தற்குரிய தீவினைகளை ஏவி விட்டான். பாவியேனாகிய நான் தொடங்கிய தொழில்களெல்லாம் சாண் வயிற்றின் பொருட்டாயின. இந்நிலை கடந்து உன் அடியார் பணிகளைச் செய்வது எக்காலமோ? என்க.

உப்பிட்ட பாண்டமானது மேலுக்கு நன்கு தோன்றினும், உள்ளே உளுத்துப் பொடியா யுதிர நிற்பதுபோல, உடம்பும் மேலுக்கு நன்கு தோன்றினும், உள்ளே துக்கம் முதலியவற்றால் சிதைந்திருக்கு மென்பார் "உப்பிட்ட கலம்" என்றனர். "வீறிட்ட செல்வர் தம் தலைவாயில் வாசமாய் வேதனையுற" என்றதனோடு "செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும், பல்வினைக் காட்டிப் பரிதவியாமல்" என்று வரும் பட்டினத்தடிகளின் திருவாக்கும் ஒப்பு நோக்கத் தக்கது. "செந்தமிழி னருமையிட்டு" என்பது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாட்டின் அருமையினைக் குறித்து என்றபடி.

(2) தந்தையே! இரக்கத்துடன் பொறுமை, கொடை, ஞானம், ஒழுக்கம்—ஆகிய குணங்களில்லாதவனாகிய நான், அடியார்களின் திருக்கூட்டத்தைக் கண்டால் மறைந்துகொள்ளும் தன்மையுடையவனா யிருக்கின்றேன். எனது பாழ்மனம் இரும்போ, வலிய உருக்கோ, கருங் கல்லோ? (ஏதென்றியம்புவேன் என்றபடி)

(3) பராபரமே! எண்ணக்தகாத—அசாத்தியமான எண்ணங்களையெல்லாம் நினைத்து நினைத்து ஏழையின் மனம் புண்ணாகச் செய்தது இனிமேல் போதும்.

---

உன்னினும் உயர்ந்த சிலரோடு உன்னை ஒப்பிட்டுப் பாராதே. உன்னில் தாழ்ந்த பலரோடு உன்னை ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்.




# “ஆனந்தபோதினி”யின் 17-வது ஆண்டு.



இறைவன் திருவருட் பெருமையாலும், செந்தமிழ்ச் செல்வர்களாகிய சந்தா நேயர்களின் பேராதரவாலும் நமது “ஆனந்தபோதினி”க்கு 16-வது ஆண்டு இனிது நிறைவுற்று இந்த ஆடிமீ முதல் 17-வது ஆண்டு பிறந்திருக்கிற செய்தியை மகிழ்ச்சிப் பெருக்குடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். சென்ற பதினாறு ஆண்டுகளாக நமது “ஆனந்தபோதினி” தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் ஆற்றிவரும் தொண்டின் பெருமையை நாம் விரித்துக் கூறவேண்டியது அநாவசியம் என்றே எண்ணுகின்றோம். சென்ற இராக்ஷஸ௵ ஆடிமீ 1௳ (16–7–15) யில் சென்னையைச் சார்ந்த வியாசர்பாடி சாது நிலயத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் திருக்கருணையால் சூட்டிய “ஆனந்தபோதினி” என்னும் அழகிய பேருடன் இச் சஞ்சிகை உதயமாயிற்று. ஸ்வாமிகளின் அநுக்கிரகத்தால், இது தோன்றிய நாள் தொட்டுப் பற்பல சிறப்பியல்புகளுடன் வளர்ந்தோங்கி, தமிழ் மக்களின் அன்பையும் ஆதரவையும் கவர்ந்து, இப்போது இருபதினாயிரம் பேர்கட்கு மேற்பட்ட சந்தா நேயர்களையுடையதாய் விளங்கி வருகின்றது. மதவியல், சமூகவியல், அரசியல், மொழிவளர்ச்சி முதல

---

சமயம் மாறுபவன் தலைபோனபின் இன்னதெனத் திரும்பிப் பார்க்கும் ஈயை ஒப்பான்.

விய துறைகளில் மக்கள் அறிவு விளக்கம் பெற்று உயரிய வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதே "ஆனந்தபோதினி"யின் தலைசிறந்த நோக்கமாகும். இதற்கேற்ப யாம் எடுத்துக் கொள்ளும் சிரமத்தை நேயர்கள் அநுபவத்தில் உணர்ந்திருப்பார்கள் என்று நம்புகின்றோம். ஆண்டு ஒன்றுக்கு ஒரு ரூபாயாகிய மிகக் குறைந்த சந்தாவில், 80-பக்கங்களில், நிறைந்த் விஷயங்களோடும் படங்களோடும் "ஆனந்த போதினி" போன்ற பத்திரிகை நடத்துவதில் எவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் உண்டு என்னும் உண்மை சிறிது சிந்திப்பார்க்கும் நன்கு விளங்காமற் போகாது. சந்தா நேயர்களின் ஆதாவும், இறைவனது திருவருளும் தவிர வேறு எத்தகைய உதவியும் எமக்கு இல்லை. இதைப்பற்றி யாம் ஆண்டுதோறும் தெரிவித்துக்கொண்டே வந்திருக்கின்றோம். எத்தகைய கஷ்ட நஷ்டம் நேரினும் நம் நாடு முன்னேற்றம் அடைந்து சுயமதிப்புடன் வாழவேண்டும் என்ற ஒரு நோக்கத்துடனேயே யாம் தொண்டாற்றி வருகின்றோம். எமக்கு மேன்மேலும் உற்சாகமும் ஊக்கமும் அளித்து ஆதரிக்க வேண்டிய பொறுப்பு எம்பால் அன்பு மிக்க சந்தா நேயர்களைச் சார்ந்ததாகும்.

கடந்த ஆண்டுகளைவிட, சென்ற பதினாறுவது ஆண்டில், நமது "போதினி" காலத்துக் கேற்பப் பழமையும் புதுமையுங் கலந்த சில விசேஷ அம்சங்களோடு வெளிப்போந்து வாசகர்கட்கு மகிழ்வூட்டி வந்த விஷயத்தை நாம் எடுத்துக் காட்ட வேண்டியது இல்லை. பதினேழாவது ஆண்டாகிய இவ்வாண்டு முதல் இன்னும் சிறந்த முறையில் நமது "ஆனந்தபோதினி"யை அலங்கரிக்க ஏற்பாடு செய்திருக்கின்றோம். சமயம், மொழி, சமூகம், அரசியல், விவசாயம், கைத்தொழில், வியாபாரம் முதலிய துறைகளில் சிறந்த அனுபவம் வாய்ந்த பேரறிஞர்களின் கட்டுரைகள் மாதந்தோறும் தவறாமல் வெளிவரும். பெண்கள் முன்னேற்றம், சிறுவர் சிறுமியர்களின் அறிவு வளர்ச்சி முதலிய விஷயங்களை நற்பயன் விளைக்கும் முறையில் நமது "போதினி" தாங்கி உலவும். ஓயாச் சிரிப்பும், அறிவும் நிறைந்த தனி விகடப் படங்களும், சம்பாஷணை விகடப் படங்களும் உங்கட்கு நகை விருந்து அளியாநிற்கும். சமூக சீர்திருத்த சம்பந்தமான-படங்களோடு கூடிய—நவரசம் சொட்டும் சிறு கதைகள் உங்கட்கு இன்பத்தேன் ஊற்றிக் கொண்டே இருக்கும். ஒவ்வொரு மாதத்திலும் நிகழும் விசேஷ சம்பவங்களைப்பற்றிய பொருள் மொழிக் குறிப்புக்கள் உங்கட்குத் தக்க வழிகாட்டிகளாக விளங்காநிற்கும். வழக்கப்படி ஆரணி-குப்புசாமி முதலியாரவர்களின் தொடர்

---

திக்கற்றவர்களுக்கு நம்மாலான உதவியைச் செய்தல் நலம்.

களையும் வந்துகொண்டே இருக்கும். ஆதலால் எல்லாத் தமிழ் மக்களையும் இன்றே நமது "போதினி"யின் சந்தாநேயர்களாகச் சேருமாறு பெரிதும் வேண்டிக்கொள்ளுகின்றோம்.

தங்களது அரும்பெருங் காரியங்கட்கிடையே "ஆனந்தபோதினி"யின் பால் அன்பு கூர்ந்து விஷயதானம் செய்து வரும் அறிஞர்கட்கும், சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பியும், வி. பி-யில் பெற்றும் ஆதரித்த அன்பர்கட்கும், புதிதாகச் சேர்ந்துள்ள சந்தா நேயர்கட்கும், ஜீவிய சந்தா நேயர்கட்கும் எமது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். நமது "ஆனந்தபோதினி"யை அன்புடன் ஆதரிக்கும் ஒவ்வொரு நண்பரும் குறைந்தபக்ஷம் ஒவ்வொரு சந்தாதாரரையேனும் புதிய ஆண்டின் ஞாபகார்த்தமாகச் சேர்த்துக் கொடுக்குமாறு மறுமுறையும் அவர்களைப் பெரிதும் வேண்டிக் கொள்ளுகின்றோம். அப்பொழுது தான் யாம் மேற்குறிப்பிட்ட சிறப்பியல்புகளுடன் பத்திரிகையைக் கவலையின்றி நடத்தித் தொண்டாற்ற இயலும என்பதையும் ஞாபகமூட்டுகின்றோம். பிரதியுபகாரங் கருதாது நாட்டு நலன் ஒன்றே கருதி உண்மைத் தொண்டாற்றிவரும் நமது "ஆனந்தபோதினி"க்கு ஒவ்வொரு சந்தா நண்பரும் ஒவ்வொரு புதிய சந்தாதாரரைச் சேர்ப்பதைத் தங்கள் தவறுக் கடமையாகக் கருத வேண்டும் என்றே வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகின்றோம். நிற்க,

விஷயதானம் புரிய விரும்பும் அன்பர்கள் சில முக்கிய விஷயங்களை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். எழுத்துப் பிழையும் பொருட் பிழையும் மலிந்த கட்டுரைகளை எழுதி அனுப்புவதினும் அனுப்பாதிருத்தலே இருபாலாருக்கும் நன்மையாகும். சிலர் கூட்டு எழுத்துக்களில் தம் மனம்போனவாறு தீட்டி அனுப்பிவிடுகின்றனர். விஷயம் நல்லதாயிருக்கலாம். ஆனால், அச்சுக்கோப்போருக்கும் எமக்கும் மிகுந்த சிரமமும் வேலைக்கேடும் ஏற்பட்டு விடுகின்றன. சிலர் ஒரு வரை யறையின்றி ஏராளமாகப் பக்கங்களை நிரப்பி யனுப்பிவிடுகின்றனர். சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் முறையை ஒவ்வொருவரும் கையாண்டு பழகவேண்டும். சிலர் திருப்பி இரண்டு பக்கங்களிலும் எழுதிவிடுகின்றனர். இவ்வாறு வரும் கட்டுரைகளை வெளியிட முடியாமையை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

"ஆனந்தபோதினி"யின் சந்தா நேயர்களும், வாசகர்களும், விஷயதானம் புரியும் அறிஞர்களும் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் பெற்றுப் பல்லாண்டு வாழுமாறு எல்லாம் வல்ல திருவருளைச் சிந்தித்து வந்திக்கின்றோம். சுபம்.

---

*பிறரை நம்பு; அவர்களும் நம்மை நம்புவார்கள். அவர்களைக் கௌரவமாக நடத்து. நம்மையும் மரியாதையாக நடத்துவார்கள்.*

# தாழ்த்தப்பட்டவர் துயரம்



புண்ணிய பூமி என்று சிறப்பிக்கப்படும் நமது பாரத நாட்டில்—"யான் பெறும் இன்பம் இவ்வையம் பெறுக" என்ற அருள் நோக்கம் வாய்ந்த பெரியார் வாழ்ந்த திருநாட்டில்—புத்தர், ராமாநுஜர், சங்கார், சித்தர்கள் முதலிய சமரஸ மெய்ஞ் ஞானிகள் அவதரித்த திவ்ய தேசத்தில்—நந்தனர், திருப்பாணழ்வார் போன்ற அடியார்களைப் பூஜிக்கும் நன்னாட்டில் ஐந்துகோடி பழம் பெருங்குடி மக்கள் தாழ்த்தப்பட்டவர்களாக வாழ்ந்து வருவது மிக வும் பரிதாபகரமான காட்சியாகும். இத்தகைய காட்சி உலகில் வேறு எந்நாட்டிலும் காணல் அரிது. அறிவுக் கூர்மை, செல்வப் பெருக்கு முதலிய சிறப்புக்களால் உலகம் இருக்கும் வரை மக்க ளுக்குள் ஒருவகை வேற்றுமை இருந்தே தீரும் என்பதை யாம் ஒப் புக்கொள்ளுகின்றோம். ஆனல் சமயத்தின் பேராலும், தெய்வத்தின் பேராலும், பிறவி காரணமாகவும் வேற்றுமை கற்பித்து மக்களைத் தாழ்த்தி வைப்பது கொடுமை என்பதே நமது அபிப்பிராயமாகும்.

ஒவ்வொரு சமயமும் அன்பையும் அருளையுமே அடிப்படையாகக் கொண்டு விளங்கி வருகிறது. எவ்வுயிர்க்கும் அன்பாயிருக்க வேண் டும் என்பதே சமயங்களின் சாரமாகும். இவ்வுண்மையைச் சிந்தி யாது சமயத்தின் பேரால் மக்களை மக்கள் கொடுமைப் படுத்துவது எத்துணை அறியாமை என்பதை யாம் கூறவும் வெண்டுமோ?

இறைவனுக்கு எல்லா உயிர்களும் சமமே. இறைவன் திரு வருட் பெருமையால் இயங்கும் பஞ்சபூதங்களும் வேற்றுமை பாராட் டாது உலகை ஆட்சிபுரிந்து வருகின்றன. நிலம் வேற்றுமை பாராட் டாது எல்லா வுயிர்களையும் தாங்கி நிற்கின்றது. நீர் வேற்றுமை காட்டுவதில்லை. நெருப்பு வேற்றுமை காட்டுவதில்லை. காற்றுக்கும் வேற்றுமை இல்லை—ககனத்துக்கும் வேற்றுமை இல்லை. இங்ஙன மிருக்க மக்கள் மட்டும் வேற்றுமை காட்டுவது என்ன முறை என் பது விளங்கவில்லை. இதனல் தெய்வத்தின் பேரால் வேற்றுமை பாராட்டுவது எவ்வாறு பொருந்தும் என்பதைச் சிறிது சிந்தித்துப் பார்க்குமாறு நேயர்களை வேண்டுகின்றோம்.

பொதுவாக நமது நாட்டில் வறுமை, பிணி, அறியாமைகள் நிறைந்திருக்கின்றன. சிறப்பாகத் தாழ்த்தப்பட்ட மக்களையே இவை பெரிதும் வாட்டி வருகின்றன என்பது கண்கூடு. இதற்குக் கார ணம் அவர்கள் தீண்டாதாராகக் கருதப்படுவதே யாகும். இந்தியா

---

கோபத்தை அடக்கி ஆளவேண்டும். "தீராக் கோபம் போராய் முடியும்" என்பதை உற்று நோக்குக.

முழுதும் இத் தீண்டாமைப் பேய் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. அதிலும் தென்னாட்டில் அதன் ஆதிக்கம் அதிகம். தமிழகத்திலும் கேரளத்திலும் அதன் கொடுமை பொறுக்கக் கூடியதாயில்லை. நாய், பன்றி, கழுதை முதலிய மிருகங்கட்கு இருக்கும் உரிமைகூடத் தாழ்த்தப்பட்ட மக்கட்கு இல்லை. அவர்கள் பொதுத் தெருக்களிலும் நடக்கும் உரிமையின்றித் தவிக்கிறார்கள். உண்ண உண வில்லை. உடுக்க உடையில்லை. குடிக்கத் தண்ணீர் இல்லை. குடியிருக்க வீடில்லை. இத்தகைய இழி நிலையில் அவர்கள் அல்லும் பகலும் அழுது மயங்கிக் கொண்டிருக்கின்றனர். தாழ்த்தப்பட்ட மக்கள் நெற்றி வியர்வை நிலத்தில் சொட்ட உழைக்கும் உழைப்பின் பயனாகவே உயர்ந்த வகுப்பினர் என்போர் உயரிய—ஆடம்பர வாழ்க்கை நடத்தி வருகின்றனர். ஆனால் தங்களைத் தாங்கும் ஏழை மக்களை அவர்கள் பல வழிகளிலும் துன்புறுத்துகின்றனர்! என்னே காலத்தின் கோலம்!

தாழ்த்தப்பட்ட மக்களை முன்னேற்ற வேண்டும், தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்று பல சங்கங்கள் தோன்றுகின்றன. பல தலைவர்கள் பேசுகிறார்கள். ஆனால் நடை முறையில் பயன் ஒன்றுங் காணமுடியவில்லை. தாழ்த்தப்பட்டவர்களின் பேரால் ஒரு சிலர் பட்டம் பதவிகள் பெறுவதுதான் கண்ட பலனாயிருக்கிறது.

சென்ற மாத முற்பகுதியில் திரிச்சி தாலூகா கூத்தப்பால், கிருஷ்ண சமுத்திரம் முதலிய கிராமங்களில் வசிக்கும் கள்ள வகுப்பினர் சில தீர்மானங்களை நிறைவேற்றிவிட்டு, அந்தத் தீர்மானங்களுக்குக் கட்டுப்படுவதாகக் கையெழுத்துப் போடவேண்டும் என்று ஆதிதிராவிடர்களையும் தேவேந்திரகுல வேளாளர்களையும் நிர்ப்பந்தம் செய்தனராம். அவர்கள் அதற்கு மறுத்துவிட்டனர். இதனால் கோபமடைந்த தலைவர்கள் வியாபாரிகளிடம் சென்று ஆதிதிராவிடர்களுக்கும், தேவேந்திரகுல வேளாளர்களுக்கும் அரிசி, காய், கறி பதார்த்தங்கள் ஒன்றும் விற்கக்கூடாது என்று பயமுறுத்தினர்களாம். அத்துடன் அவர்களுடைய வீடுகளிலும் நுழைந்து தடிகளால் தாக்கிக் கொள்ளையடித்துக் கொண்டும் போனார்களாம். என்னே அநியாயம்!

கள்ள வகுப்பினர் தங்கள் சாதிக்கூட்டத்தில் அடியிற் காணும் தீர்மானங்களை நிறைவேற்றி வைத்திருக்கின்றனர்.

1. ஆதிதிராவிடர்களும் தேவேந்திரகுல வேளாளர்களும் முழங்காலுக்குக் கீழே துணி உடுத்தக்கூடாது. 2. இந்த வகுப்புக்களைச் சார்ந்த ஸ்திரீ—புருஷர்கள் தங்க நகை போட்டுக் கொள்ளக்கூடாது. 3. ஸ்திரீகள் மட்குடங்களில்தான் தண்ணீர் கொண்டு போகவேண்

---

நம்மை யாவரும் வியக்கக் கருதி நாமே நம்மைப் புகழ்தல், விளக்கைப் பிரகாசிப்பக் கருதி அதனது தகழியில் நீரை வார்த்தால்போலும்.

டும். குடத்தைக் கொண்டுபோக வைக்கோலை உபயோகிக்க வேண்டுமே யொழியத் துணியை உபயோகிக்கக் கூடாது. 4. குழந்தைகள் படிக்கக்கூடாது. 5. மிராஸ்தார்களின் மாடுகளை மேய்க்குமாறு தான் குழந்தைகளை விடவேண்டும். 6. மிராஸ்தார்களின் பண்ணைகளில் ஸ்திரீ புருஷர்கள் அடிமைகளாகவே வேலை செய்ய வேண்டும். 7. மிராஸ்தார்களிடமிருந்து நிலம் வாங்கி வாரத்திற்கோ குத்தகைக்கோ சாகுபடி செய்யக்கூடாது. 8. சொந்த நிலங்களை மிராஸ்தார்களுக்குக் குறைந்த விலைக்கு விற்றுவிடவேண்டும். இல்லாவிட்டால் பாசனத்திற்கு ஜலம் விடப்படமாட்டாது. 9. காலை 7-மணி முதல் மாலை 6-மணி வரை மிராஸ்தார்களின் கீழ் வேலை செய்யவேண்டும். புருஷர்களுக்குத் தினம் 4-அணுவும் ஸ்திரீகளுக்கு 2-அணுவும் கொடுக்கப்படும். 10. கலியாணம் முதலிய விசேஷங்கட்கு மேளம் வைக்கக்கூடாது. பல்லக்கு ஏறக்கூடாது. 11. தாலி கட்டுமுன் குதிரைமீது ஊர்வலம் போகும் வழக்கத்தை நிறுத்தவேண்டும். வண்டி முதலியவற்றை எதற்கும் உபயோகிக்கக்கூடாது.

இத் தீர்மானங்களும் செய்தியும் "சுதேசமித்திரன்" முதலிய பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. இத்தீர்மானங்கட்கு விரிவுரையோ வியாக்கியானமோ ஒன்றும் வேண்டியதில்லை என்று நினைக்கிறோம். முன்னர் ராமநாதபுரம் ஜில்லாவிலும் சில விடங்களில் இத்தகைய தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்றுக் கிளர்ச்சியான செய்தியை நேயர்கள் அறிந்திருக்கக்கூடும். கோயமுத்தூர் ஜில்லாவிலும் இம்மாதிரியான கொடுமைகளை உயர் வகுப்பினர் என்போர் செய்து கொண்டே வருகின்றனர். அன்பும் அறமும் வேண்டும் "உயர் வகுப்பினர்" இக்காலத்திலும் இத்தகைய மனப்பான்மை கொண்டிருப்பது விந்தையாகவே யிருக்கிறது. தீவிர சமூக சீர்திருத்த வாதிகள் என்போர் எழுத்திலும் பேச்சிலும் ஆர்ப்பாட்டம் செய்கிறார்களே யொழிய இக்கொடுமைகளை நீக்கச் சிறிதேனும் உருவான முயற்சி செய்வதாகத் தெரியவில்லை. மக்கள் எல்லோரும் சமத்துவ, சகோதரத்துவ, சுதந்தரவேட்கைகொண்டு விடுதலைப்போர் நிகழ்த்தி வரும் இந்நாளில் கள்ள வகுப்பினரின் தீர்மானங்கள் நகைப்பிற் கிடமானவையாகவே விளங்குகின்றன. தாழ்த்தப்பட்ட மக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அடிமைகளாகவே காலங் கழித்து வருகின்றனர். அவர்கட்குக் கல்வி இல்லை. அறிவில்லை. அதனால் அவர்கள் அநுபவிக்கும் கொடுமைகட்கெல்லாம் மூல காரணம் "தலைவிதி" என்று நினைத்துக்கொண்டிருக்கின்றனர். ஆனால் மகாத்மா காந்தியடிகளும் காங்கிரஸும் அத் "தலைவிதியை" மாற்றி விரைவில் விமோசனம் செய்யக்கூடும் என்பது எமது மனப்பூர்வமான நம்பிக்கை. தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர்கள் ஷை கிராமங்கட்குச் சென்று தக்க பரிகாரம் தேடுமாறு அவர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

பீகார்-ஒரிசா மாகாணத்தில் கயா, பாடலீபுரம், மாங்கீர், வலமா முதலிய ஜில்லாக்களில் வசிக்கும் ராஜ்வார் ஜாதியினரான தாழ்த்தப் பட்ட மக்கள் அவ்விடங்களிலுள்ள உயர் வகுப்பினர் என்போர் செய்யும் கொடுமைகளை மகாத்மா காந்தியடிகட்குத் தெரிவித்துக் கொண்டனர். அக்கொடுமைகளும் சற்றேறக்குறைய நம் கள்ள வகுப்பினரின் கொடுமைகளைப் போலவே இருக்கின்றன. அவர் கட்கு மகாத்மா காந்தியடிகள் அளித்த விடை வருமாறு:—

"இம்மாதிரியான வழக்கங்கள் நாட்டின் பல்வேறு பாகங்களி லும் இருக்கின்றன. இதற்கும் ஆங்கில ஆட்சிக்கும் யாதொரு சம் பந்தமும் இல்லை. இப்பழக்கம் தொன்றுதொட்டு இருந்துவருகிறது. இதற்காகவே நாம் வெட்கமுறவேண்டியு மிருக்கிறது. அறிவுச் சுடர் திகழும் இக்காலத்தில்-விழிப்படைந்து சுதந்தரவேட்கை மிக் குள்ள இக்காலத்தில் இம்மாதிரியான கொடுமைகளை நடத்திவர நாம் யாதொரு சமாதானத்தையும் சொல்ல முடியாது. காங்கிரஸ் இம் மாதிரியான வகுப்பினரின் கோரிக்கைகளை நிறைவேற்றிவைப்ப தையே தன் கடமையாகக்கொண்டிருக்கிறது. அடிமை வகுப்புக் கள் நிலவுவதே நம் நாட்டிற்கு ஒரு பெருங் குறை"

இப் பொன்மொழிகளையே யாமும் நமது தாழ்த்தப்பட்ட மக் கட்கு ஆறுதலாக எடுத்துக் கூறுகின்றேம். ஆதலால் தாழ்த்தப் பட்ட மக்கள் எல்லோரும் காங்கிரஸில் சேர்ந்து காங்கிரஸ் கட்டளை களை நிறைவேற்றிவைக்க உதவிபுரியுமாறு வேண்டுகின்றேம். அவ் வாறு செய்தால் சிறிது காலத்தில் அவர்களுடைய குறைகளெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் பறந்துபோம் என்பதில் அணுவளவும் ஐயம் இல்லை.

ஓம் தத் ஸத்.




# நனவோ, கனவோ?

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

மந்தியு மறியா மரங்கள் செறிந்த மலைச் சாரலில் மலய மாருதம் மகிழ்ந்து தவழ்ந்தது. குழன்ற கருங்கூந்தலில் நறுமலர் பெய்து, நஞ்சினும் கொடிய கண்களில் அஞ்சனம் எழுதி, பஞ்சின் மெல்லிய பாதம் சிவக்க நடந்த மங்கையர் சிலர் அங்குவந்துற்ருர்கள். கருமலையில் வெள்ளருவி கறங்கி வழிந்திறங்கிய காட்சியைக் கண்டு களிப்புற்று நின்ருள் ஒரு மங்கை; கானகப் பூஞ்சோலையில் களியன்னமும் மட அன்னமும் நடமாடக் கண்டு மகிழ்ந்து நின்ருள் ஒரு மங்கை; காமர் பூஞ்சுனைகளில் கமலங்கள் குவியக் கண்டும் குமுதங்கள் நெகிழக் கண்டும் களித்து நின்ருள் ஒரு மங்கை; மதுவுண்ட மாந்தர்போல் எங்கும் ஓடி இடறிய வண்டுகளைக் கண்டு இன்புற்ருள் ஒரு மங்கை; வாச மலர்க் கொடியில் ஊசலாடி மகிழ்ந்தாள் ஒரு மங்கை; மரக் கொம்புகளில் ரஞ்சிதமாய்க் கொஞ்சிக் குலாவிய பஞ்சவர்ணக் கிளிகளைக் கண்டு பரவசமுற்று நின்ருள் ஒரு மங்கை; இவ்வாறு தோழியர் பலவாருகப் பிரிந்து செல்ல இனம் பிரிந்த மான்போல் கலங்கி நின்ற கற்பக வல்லியின் கண்ணெதிரே ஓர் கானமயில் தோகைவிரித்தாடத் தொடங்கிற்று. தோகை மயிலின் அழகைக் கண்டு ஓகையுற்று நின்ற பூங்கோதையின் முன்னே மாரன் எனத்தகைய ஓர் வீரன் தோன்றினன். மஞ்சள் வெயில் வீசிய மாலைப் பொழுதில் மல்லிகை மணம் கவர்ந்த மெல்லிய பூங்காற்றில் தனியே நின்ற தையலைக் கண்ட வீரன் மையலுற்ருன். தலை கவிழ்ந்து நின்ற நங்கையின் அழகினைக் கண்களாற் பருகி ஆனந்தவாரியில் மூழ்கிய தலைமகன், தவத்தால் வந்த அத்தையலை நோக்கி,

"மலர் சொருகும்—கொண்டையிலே
கலகவிழிக்—கெண்டையிலே
மனம் லகித்துன்—அண்டையிலே
வந்தேனடி செந்தேனே."

என்று கூறும் மொழிகளில் காதல் மணம் கமழக் காணலாம். மையல் விளைத்த மங்கையின் மலர் சொருகிய குழலையும், மை யெழுதிய விழியையும்

---

நன்மை தீமை அறியப் பகுத்தறியும் அறிவை மயக்கி, அது பயக்கும் ஒழுக்கத்தைக் கெடுத்தலால் மதுபானத்தை அறவே ஒழிக்கவேண்டும்.

தலைமகன் புகழும் முறை புதியதோர் இன்பம் அளிப்பதாகும். உண்டாரை மயக்கும் தேன்போல், கண்டாரை மயக்கும் கட்டழகுவாய்ந்த காரிகையைச் "செந்தேனே" என்று வீரன் சிறப்பிக்கும் முறை செம்மைசான்ற இன்பம் தருவதாகும். கள்ளமற்ற உள்ளத்தடத்தில் ஊற்றெடுத்துப் பொங்கும் இன்ப வெள்ளத்தின் அலைகளே இனிய காதல் மொழிகளா மென்பதில் ஐயமொன் றுண்டோ?

முன்னொரு நாள் பந்தடிக்கும் மேடையிலே அஞ்செஞ் சீறடிச் சிலம்புகள் சிலம்ப, செங் கையிலணிந்த சங்கு வளைகள் புலம்ப, பொய்யோ எனும் இடை துவண்டு நைய, தென்னன் வாழ்க வாழ்க என்றும் மன்னன் வாழ்க வாழ்க என்றும் பாங்கியொடு மகிழ்ந்து பந்தாடிய போது, மங்கை நோக்கிய நோக்கை நினைந்து நெஞ்சம் தழைத்த தலைமகன்,

" பந்தடிக்கும்—மேடையிலே
வந்துவிளை—யாடையிலே
பார்த்து நின்ற—ஜாடையிலே
பறிகொடுத்தேன் என்மனசை."

என்று கரவாதுரைக்கும் காதல் மொழிகள் கற்போர் மனத்தைக் கவர்வனவாம். இவ்வாறு கற்பகவல்லியைக் கண்டு இன்புற்ற காதலன், அம்மங்கையின் மொழிகளை வேட்ட நெஞ்சோடு கேட்டு இன்புற்ற முறை இனி, அறியத் தக்கதாகும். மாங்குயிலின் குரலோடு மங்கை, பாங்கியுடன் பேசும்பொழுது மறைந்து நின்று கேட்டு மதுவுண்டவன்போல மகிழ்ந்த தலைமகன்,

" மாங்குயிலின்—ஓசையிலே
பாங்கியுடன்—பேசையிலே
மான்விழிஉன்—ஆசையிலே
நான்முழுகிப்—போனேனடி."

என்று நயந்து கூறும் மொழிகளில் நங்கையின் மொழியின் செம்மையும் விழியின் வெம்மையும் மாண்புற இலங்கக் காணலாம். இவ்வாறு எழுதரிய நலம் வாய்ந்த நங்கையின் அயில் விழிகளைக் கண்டும் குயில் மொழிகளைக் கேட்டும், இன்புற்ற காதலன் நேசம் நிறைந்த நெஞ்சினனாய் நெருங்கும் பொழுது, நேச மடையை நிறைக் கதவாலடைத்த கன்னி,

" என்றெனது—செங்கையிலே
.................................
இட்டமாய்—நெருங்கையிலே
கிட்டவரக் கூடாதென்றேன்."

என்று கூறும் மொழிகள் அறிந்து இன்புறத் தக்கனவாம். பள்ளத்துட்பாயும் வெள்ளம்போற் பாவைபாற் பரந்து பாய்ந்த தள்ளரிய காதலை உள்ளத்தே அடைத்துத் தலைமகன் மீண்டும் பேசலுற்றான்.

---

திரவியம் தேடுதற்கு முயற்சியே சிறந்த கருவி. "முயற்சி மெய்வருந்தக் கூலிதரும்" என்பதை உணராதார் யாவர்?

" துலங்கிடும் உன்—மூக்கினிலே
இலங்கிடும் புல்—லாககினிலே
தூக்கின தன்—வாக்கினிலே
சொன்னால் அதே போதுமென்றான்."

உள்ளங் கவர்ந்தெழுந்து ஓங்கு காதலை அறிவினாற் காத்து, மான்போல் மருண்டு நின்ற மங்கையை நோக்கி "மாதே! உன் வாக்கின் இனிமை யறிந்தேன். இனி, உன் மூக்கில் தொங்கும் புல்லாக்கில் தூக்கி யிருப்பதை உன் வாக்கினால் சொல்; அவ்வளவே! எனக்குப் போதும் என்று வேண்டினான். வெல்லுதற்கரிய வீரனை ஒரு சொல்லால் விலக்கக் கருதிய மங்கை "மூத்து" என்று மெத்தனமாய்க் கூறினாள். மூத்து என்னும் சொல், வாய்விட்டுச் செல்லு முன்னமே வீரன் விரைந்தணைந்து மங்கையை முத்தமிட்டான்.

" மெத்தவெகி—ழித்தனமாய்
மூத்து என்றென்—மெத்தனமாய்
மின்னேகப—டத்தனமாய்
என்னை முத்தம் இட்டானடி."

என்று காவா நாவால் விளைந்த தீமையை நங்கை பின் தோழியிடம் கரவாது எடுத்துரைத்தாள். காதலில் தோற்றவர் வென்றார் என்னும் கட்டுரையை விளக்கி நின்றான் காதலன். நாணத்தால் கண் புதைத்து நின்ற நங்கை மீண்டும் கண்களைத் திறந்தபோது அங்க நலம்வாய்ந்த முருகன் தங்க மயில்மீது நிற்கக் கண்டாள்.

" சீர்பெருகும்—காலழகும்
மார்பினில்மூங்—நூலழகும்
செங்கையினில்—வேலழகும்
கண்குளிரப் பார்த்தேனடி."

என்று கோலமா மயில்மீது குலவிய குமரன் பெருமையைக் கற்பகவல்லி எடுத்துரைத்தாள். கொஞ்சித் தமிழ் பகர்ந்த குமரனே, தஞ்சமென்றுணர்ந்த தலைமகள்,

" முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்போதும்
நம்பியே கைதொழுவேன் நான்."

என்று கைகூப்பித் தொழுது நிற்கையில் கற்பகவல்லியின் தோழி, அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்த தலைமகளைத் தட்டி எழுப்பித் துயிலொழித்து, முருகனையும் வல்லியையும் பிரித்துவைத்தாள்.

---

நம்மேல் அன்பு இல்லாதவர்கள் மேலும், நாம் அன்புடையவர்களாகவே இருத்தல் வேண்டும்.




# பெண்களது மாதவிடாயின் முடிவுகாலம்

(சோமன் எழுதுவது.)

பெண்களுக்கு முதல் முதல் ருதுவாகிற காலத்து அவர்களுடைய சரீரம் எவ்வாறு இருக்குமோ, அதற்கு நேர்விரோதமான நிலையில் ருது முடிகிற (நின்றுவிடுகிற) காலத்தில் ஒரு மாற்றம் ஏற்படுமென்பது அநுபவம். சாதாரணமாய் 45-வயதுக்குள் அல்லது சிலருடைய தேக ரீதியைப் பொறுத்து 50-வயதுக்குள் ரஜஸ்வலையானது நின்றுபோகும். சிலருக்கு 30, 32, 35-வயதுக்குள்ளும் நின்று விடுவதுண்டு. சிலருக்கு 70-வயது வரையிலிருப்பதுமுண்டு. இவைகள் சாதாரண நியமத்திற்கு விபரீதமான சம்பவங்களாகும். இச்சம்பவங்கள், நோய்களாலும் தேக நிலையாலும் அடிக்கடி உண்டாகி அழியும் கருப்பத்தாலும் ஏற்படுவனவாகும். சீதோஷ்ண நிலையிலேற்பட்ட பேதத்தாலும் இவ்வாறு சம்பவிக்கலாம்.

மாதவிடாயின் முடிவு காலத்திற்கு வித்தியாச மேற்படுவதுபோல் அதன் ரீதிக்கும் பேதமும் வித்தியாசமும் ஏற்படுவதுண்டு. சிலருக்கு மாதவிடாய் திடீரென்று நின்றுவிடுவதும், சிலருக்கு கிரமமாக நிற்பதுமுண்டு. திடீரென்று நின்றுபோவது சாதாரணமானதல்ல. ஏதாவது பிரத்தியேக நோய்கள் ஏற்பட்டிருக்கும் காரணத்தாலோ, அல்லது பயம் முதலிய இருதய விகாரத்தினாலோ இருத்தல் வேண்டும். சாதாரணமாய் ஏற்பட்டது கிரமமாய நிற்பதுவேயாம். ஒரு மாசத்தில் கொஞ்சங்கூட இல்லாதிருந்தும், அடுத்த மாசத்தில் கொஞ்சம் உண்டாகியும் சில சமயம் 2, 3-மாசங்களுக்கும் அதற்குமேலும் வாரமலிருப்பதும் உண்டு. சிலர்க்கு (இத் தீண்டால்) நிற்கும் காலத்து ரத்தத்தோடு காணுவதும் சில மாதங்களில் கிரமமாய் ரத்தங் குறைந்து கொண்டு வந்து, அவற்றில் நிறவித்தியாசங்களும் கண்டு, முடிவில் சௌகரியமாய் நின்றுவிடுவது முண்டு.

இதன் முடிவு காலத்து, ஆரம்ப காலத்துண்டாகிற சரீரத்தினுடைய பிரகிருதி வித்தியாசத்திற்கு விபரீதமாய் ஒரு மாற்றம் ஏற்படுமென்று மேலே சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? அதாவது கருப்பாசயமும், அதன் சம்பந்தப்

---

நன்மை செய்தற்குச் சமயம் நேர்ந்தபோது செய்யாதொழிவோமானால், பின் ஒரு காலத்தில் அது வாய்ப்பது அரிது.

பட்ட அவயவங்களும் சுருங்கியும், மார்பு பெருத்தும், பொதுவாய் சரீரம் வளர்ச்சி பெற்றும், சிலருக்கு வளர்ச்சி குன்றியும், சிலருக்கு அளவுக்கதிகம் பூரித்தும் பல வித்தியாசங்கள் ஏற்படலாம்.

மூடிவு காலத்துள்ள வித்தியாசங்களால் உடம்புக்கு சௌகரியக் குறைவு கள் உண்டாவது நிச்சயம் என்று தீர்மானமாய்ச் சொல்வதுண்டு. ஆனல் அவை உண்மையல்ல வென்றும், மனக்கூப்பமே என்றும், மேதாவிகளான (டாக்டர்) வைத்தியர்கள் சொல்லுகிறார்கள். ஆனல் நம் நாட்டிலுள்ள பெண் களில் பலருக்கு இதன் மூடிவு காலத்து ஏதாவதொருவகைச் சௌகரியக் குறைவுகள் ஏற்பட்டே வருகின்றன. சரீர போஷணைக் குறைவுகளாலும், பிரவிர்த்தி தோஷங்களாலும், தேகதிடக் குறைவாலும் இந்த அசௌகரியம் ஏற்படக் காரணமாக இருக்கலாம். நல்ல சரீரதிடமும் ஆரோக்கியமுமுள்ள பெண்களுக்கு மாதவிடாய் மூடிவு (நிற்கும்) காலத்து யாதொரு அசௌகரிய மும் உடம்புக்கு ஏற்படாததோடு சுக சரீரமாகவும் ஆய்விடுகின்றது. ஆனல் இவ்வாறு ஆரோக்கிய முள்ளவர்கள் நம் நாட்டில் மிகக் குறைந்த தொகையினரே. எப்படியாயினும் இதன் மூடிவு காலத்துப் பல ஸ்திரீகள் கஷ்டப்படுகிறார்கள் என்பது நிச்சயம். அக்கஷ்டங்கள் எப்படிப்பட்டன வென் பதையும் அதற்காகவுள்ள ஆங்கில மருந்தையும் குறித்தெழுதுவோம்.

சில பெண்களுக்கு மாதவிடாய் நிற்கும் காலத்து, தலையிடி, பதப்பில் சூடு, தலை மயக்கம், நெஞ்சிடி, இரத்தப்போக்கு முதலியன உண்டாகும். சிலர்க்குக் கைகால்கள் சில்லிட்டு குளிர்தலும், மாறி மாறிச் சூடுண்டாதலும் ஏற்படும். சிலர்க்கு மேல் சொல்லப்பட்டவையோடு, மூத்திரத் தடையும், அந்த இடத்தில் தினவும், மற்றும் சிலர்க்கு மனமுறிவும் சத்திப்பும் வயிறு இளக்கமும் ஏற்படும். சிலர்க்கு வயிற்றில் வாயு நிறைந்து கருப்பந்தானுண்டா யிருக்கின்றதோ என்று ஐயுறுமாறு வயிறு பெரிதாய்த் தோன்றி திட்டுமுட்டுக் காளாவதும் சிலர்க்கு வாயிலிருந்து உமிழ்நீர் உண்டாவதும், வியர்வை உண் டாவதும், சிலர்க்குத் தூக்கம் குறைவதும், மாதவிடாய் மூடிவிற்குப் பிறகு நீர்போக்குண்டாவதும், அது அதிகப்படுவதும் உண்டு. இவ்வாறு கிரமத் திற் கதிகமாய் நீர்ப்போக்காவ துண்டாகுமானல் கட்டாயமாய் கருப்பப் பை யைச் சோதித்துப் பரிகாரம் தேடவேண்டும். 45-வயதை யடுத்துத்தான் கருப்ப பாத்திரம் அற்புதமான சில செய்கைகளுக் கிடமாகும் காலம். இம் மாதிரி கருப்பாசயத்தினுடைய அற்புதங்களுக்கும் கோளாறுகளுக்கும் முதல் இலக்ஷணம் கூடுதலாக நீர்ப்போக்கும் இரத்தப்போக்குமாகும். பிரகிருதி வித்தியாச நிமித்தம் இப்போக்குகள் இல்லாமலு மிருக்கக்கூடும்.

### தீண்டல் நிற்தும்காலத்து அநுசரிக்க வேண்டிய சில விதிகள்.

வெந்நீரில் (சுவேதநாளங்கள் விகசிக்கத் தக்க வண்ணம்) குளித்து வர வேண்டும். மிதமாகவேனும் வியாயாமம் செய்துவருவது மிக்க நல்லது. வியாயாமம் செய்ய இயலாதவர்கள் உடம்பைப் பிடித்துவிட்டு வரவேண்டும். தூக்கம் குறைவாயிருந்தால் நல்ல தூக்கம் வருவதற்கு வேண்டிய சிகித்ஸை கள் செய்துகொள்ள வேண்டும். படுக்கை அறைகள் தாராளமாயும், சுத்த மாயும், நல்ல காற்றும் வெளிச்சமும் உள்ளே வரக்கூடியவையாயும் இருக்க

---

தம் நலத்தின் பொருட்டன்றி, பிறர் நலத்தின்பொருட்டும் பிரயாசைப்படு தல் உத்தமர்க்கழகு.

வேண்டும். மனம் யாதொரு வியாகூலத்திற்கும் இடங் கொடுக்காதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். முக்கியமாக நித்திரை போகுமுன் மனது நிர்விசாரமாயிருத்தல் வேண்டும். அதற்கு வேண்டியவற்றைக் கருதிக் கொள்ள வேண்டும். தூக்கம் குறைவாக உள்ளவர்கள் படுக்கைக்குப் போகுமுன் வெந்நீரில் குளிக்க வேண்டும். சம்போகத்தை அநேகமாய் நிறுத்திவிடவேண்டும். இதுவே பலவித நோய்களுக்குக் காரணமாகும். ஏதாவது காரணத்தால் இச்சமயங்களில் (நிவிர்த்தியில்லாதிருந்தால்) சம்பந்தம் நடத்த வேண்டி வந்தால் கூடியவரை அவற்றினின்றும் விடுபடவே பிரயாசைப்பட வேண்டும். சரீர நிலைமையை அனுசரித்து நடக்காமல் புதிய மணப்பெண்ணாக நினைத்து நடந்தால் சுகத்திற்குப் பதிலாக பலவித துக்கம் உண்டாகும். ஜீவியமே ஒரு வெறும் பாரமாயும் கஷ்டங்கள் அநுபவிக்கவும் நேரும். யௌவன தசையில் மிகச் சந்தோஷத்தோடும் உற்சாகத்தோடும் காலங்கழித்த பெண்கள், இக்காலத்து அதிக கோபமும் சம்போக பழக்கம் கொண்டுள்ள தாகமும் ஏற்பட்டு ஆலோசனைக் குறைவுள்ளவர்களாய்ப் போவதுண்டு. இப்படிப்பட்ட சுபாவ வித்தியாசம் கண்டால் அப்பெண்மணிகளை கிருககிருத்தியங்களிலிருந்து விலக்கி சுகவாசஸ்தலங்களுக்குக் கொண்டு சென்று பார்க்க வேண்டும்.

### நோய் விவரங்களும், மருந்துகளும்.

கோபசுபாவம், பின்னல் குஞ்சுக் குழியிலிருந்து முன்வசம் கண்ணிமை வரையுள்ள தலைவேதனை, தலையிலும் உள்ளங்கையிலும், காலிலும் எரிச்சல் காண்பது முதலியவைகளுக்கு "ஸாம்குவிநேரியா" என்னும் மருந்தை உபயோகிக்கலாம்.

இரவில் குளிரும், பகலில் அதிக உஷ்ணமும், இரவில் க்ஷீணம், உச்சிச் சூடு, தொண்டை இறக்கம், உறக்கத்திற்குப் பிறகு எல்லா நோய்களும் வர்த்தித்தல் முதலியவை கண்டால் "லாக்கஸிஸ்" அரோசிகம், உபஸ்தத்தில் தினவு, நீர்ப்போக்கு, உஷ்ணம் இவைகளுள்ளவர்கள் "சல்பர்" என்னும் மருந்தை உபயோகிக்க வேண்டும்.

முகமும் வாயும் சுடுதல், உமிழ்நீர் உண்டாதல், வியர்வை, மனமடிப்பு, சத்திப்பு முதலியவை கண்டால் "ஜபாரான்டி" என்னும் மருந்தை உபயோகிக்கலாம்.

அஜீர்ணம், மனமடிப்பு, சத்திப்பு, வயிறு இளக்கம், பொதுமல், நரம்பு சம்பந்தமான வேதனை, கண்ணீர் வடிதல், சரீரம் தடித்தல் முதலியவற்றிற்கு "பழ்சாற்றில" என்னும் மருந்து உபயோகம்.

வியர்வை தாராளமாதல், நீர் மஞ்சள் நிறமாய்ப் போதல், இதன் ஹேதுவினல் அந்த இடத்தில் தினவுண்டாதல் 'இஸ்ற்றீரியா' சம்பந்தமான கோளாறுகள்—இவற்றிற்றிற்கு, "ஸிப்பியர்" என்னும் மருந்து குணமுள்ளதாகும்.

தலைச்சூடு, கிரக்கம், இரத்தக் கொதிப்பு, தலையிடி, முகம் சிவப்பாதல், அடிக்கடி சுவாசம் உண்டாதல் (பெருமூச்சு) இவைகளுக்கு "கிளாேேனாயின்" என்ற மருந்து குணமுள்ளது.

தனியே இருக்கவேண்டுமென்ற அவா, சரீரம் முழுவதும் திமிர்போல் தோன்றுதல், அடிக்கடி மனதிற்கு வேதனை தோன்றுதல், தொண்டையில்

---

நாம் பிறர்க்கு ஒன்றை வாக்குக் கொடுக்குமுன் அது நம்மால் இயலுமோ இயலாதோ என ஆராய்ந்து வாக்குறுதி செய்யவேண்டும்.

ஏதோ இருப்பதுபோல் தோன்றுதல் இவைகளுக்கு "இக்நேஷியா" என்னும் மருந்து மிக நல்லது.

தூக்கமில்லாமலிருப்பதற்கு "காப்யா" என்ற மருந்து நல்ல மருந்தாகும்.

இடப்பக்கமெல்லாம் வேதனை, இடது ஸ்தனத்தில் அடிப்பாகத்து வலி, தலை வேதனை, கண்களில் வலிகாணுதல், கோபசுபாவ முதலியவற்றிற்கு "ஸிம்ஸிப்பியூகா" மருந்து உபயோகம்

நலல நிறத்தோடு தாராளமாய் இரத்தம் போதல், கணுக்கால் முதலிய பாகங்களில் நீர் இறங்கி சுரப்பு உண்டாதல், சரீரமெல்லாம் ஓர் கூச்சமுண்டாதல், இவற்றிற்கு உபயோகஞ் செய்வதற்கு "பேறம் மேற்றலிக்கம்" மிகவும் ஏற்றது.

# சுப்பன் ராமாயணங் கேட்டது



மாட்டுக்காரச் சுப்பன் பெரிய முட்டாளாயிருப்பதைக் கண்ட அவனுடைய மனைவி சாஸ்திரிகளின் ராமாயண காலக்ஷேபத்தைக் கேட்குமாறு தூண்டினாள். அவ்வாறே அவன் காலக்ஷேபம் நடக்குமிடத்திற்குப் போய் தெருவில் கைத்தடியை ஊன்றிக் குனிந்துகொண்டு நின்றான். இதைக் கண்ட ஒரு போக்கிரி அவனது பிடரியில் ஏறி உட்கார்ந்துகொண்டு கடைசிவரை இறங்கவே இல்லை. சுப்பனும் இதுதான் ராமாயணங் கேட்பது என்று முடிவு செய்துகொண்டு வீட்டுக்குப் போனான்.

மனைவி :—"என்ன? ராமாயணங் கேட்டாயா ? எப்படி இருந்தது ?"

சுப்பன்:—"ஆஹா! நன்றாய்க் கேட்டேன். ஒரு ஆள் பாரம் இருந்தது!"

---

நாம் சிறு துன்பங்களைச் சகிக்கப் பயிலல்வேண்டும்; பயில்வோமாகில், மேலே பெருந் துன்பங்களையும் சகிக்கவல்லவர் ஆவோம்.

# குயில் பாட்டு.




வானரரே!—மண்ணிலுயிர்க் கெல்லாம் தலைவரென மானிடரே
எண்ணிநின்றார் தம்மை; எனிலொருகால்—ஊர்வகுத்தல்
கோயில், அரசு, குடிவகுப்புப் போன்ற சில
வாயிலிலே யந்த மனித ருயர்வெனலாம்.
மேனி யழகினிலும் விண்டுரைக்கும் வார்த்தையிலும்
கூனி யிருக்கும் கொலுநேர்த்தி தன்னிலுமே
வானரர்தம் சாதிக்கு மாந்தர்நிக ராவாரோ?
ஆனவரையும் அவர்முயன்று பார்த்தாலும்,
பட்டுமயிர் மூடப் படாத தமதுடலை
எட்டுடையால் மூடி யெதிருமக்கு வந்தாலும்,
மீசையையும் தாடியையும் விந்தைசெய்து வானரர்தம்
ஆசை முகத்தினைப்போல் ஆக்க முயன்றிடினும்
ஆடிக் குதிக்கும் அழகிலுமை நேர்வதற்கே
கூடிக் குடித்துக் குதித்தாலும், கோபுரத்தில்
எறத் தெரியாமல் எணிவைத்துச் சென்றாலும்,
வேறெத்தைச் செய்தாலும், வேகமுறப் பாய்வதிலே
வானரர்போல் ஆவரோ? வாலுக்குப் போவதெங்கே?
ஈனமுறுங் கச்சை இதற்கு நிகராமோ?
பாகையிலே வாலிருக்கப் பார்த்ததுண்டு கந்தைபோல்
வேகமுறத் தாவுகையில் வீசி எழுவதற்கே
தெய்வங் கொடுத்த திருவாலைப் போலாமோ?
சைவ சுத்தபோசனமும் சாதுரியப் பார்வைகளும்
வானரர்போற் சாதியொன்று மண்ணுலகின் மீதுளதோ?

—பாரதியார்.

# "அண்ணல் தன் வண்ணம்"

(தோ. மு. பாஸ்கரத்தொண்டைமான், பி. ஏ.)

"இவ்வண்ணம் நிகழ்ந்தவண்ணம் இனியிந்த உலகுக்கு எல்லாம்
உய்வண்ணமன்றி மற்றோர் துயர்வண்ணம் உறுவதுண்டோ
மைவண்ணத் தரக்கிபோரில் மழைவண்ணத் தண்ணலே உன்
கைவண்ணம் அங்குக்கண்டேன் கால்வண்ணம் இங்குக்கண்டேன்"

என்று "ஐவரை அகத்திடை அடைத்த" கோசிகமுனிவன் மன்னவன் மகனைப்புகழ்ந்து கூறும் உரையாக கம்பரது இராமகாதையில் இச்செய்யுள் அமைந்துள்ளது. கவியரசர் கம்பர் பெருமான் மழைவண்ணத் தண்ணலின் கைவண்ணத்தையும் கால்வண்ணத்தையும் போற்ற எடுத்துக்கொண்ட இடங்கள் மிகவும் நயஞ்சான்ற இடங்கள் ஆகும் எனினும் அண்ணல்தன் வண்ணத்தை, இவ்விரண்டிடங்களில் மட்டுமன்றி இன்னும் பல விடங்களிலும் அமைத்துள்ள பெருமை கம்பருடையதேயாகும். ஆகவே அண்ணல் தன் வண்ணத்தைக் கம்பர்தங் கவிநலத்தில் யானறிந்தமட்டில் எடுத்துக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

அண்ணல் தன் வண்ணம் யாவரும் போற்றும் பெருமை வாய்ந்தது என்று நான் கூறுவது மிகையேயாகும். "நம்பியைக்காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்" என்று கவியரசர் கம்பர் பெருமான் இராமனது ஒப்புயர்வற்ற அழகினைப்போற்றி யுரைக்கின்றார். அழகே உருவெடுத்ததென்ன நின்ற அணங்காம் சீதை மிதிலைமாநகரில் கன்னிமாடத்து மேடைமீது நின்று அண்ணலைக்கண்டு அவனது அழகெனும் தேறலை அமிர்தமாயுண்டு மயங்கி நிற்கின்ற நிலையைச் சித்திரிக்கும் கம்பர் கவிப்பெருமையே பெருமை

"இந்திரநீல மொத்திருண்ட குஞ்சியும்
சந்திரவதனமும் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளுமேயல
முந்தி யென்னுயிரை அம்முறுவல் உண்டதே"

என்று சீதை கூறும் செம்மைசான்ற சொற்கள் இராமனது வரம்பில் பேரழகினுக்கும் ஓர் வரம்பு காட்டுவதாகும். இன்னும் "மையோ மரகதமோ மழை முகிலோ ஐயோ இவன்வடி வென்பதோர் அழியா அழகுடையான்" என்று கவியரசர் இராமனது அழகைப்போற்றி யுரைக்கின்றார். அழியா அழகுடைய பெருமகனாய் இலங்கிய பெருமையை இராமனதாக்க விரைகின்றார் நமது கவியரசர். இவனது அழகை மாந்திமாந்திக் களிப்பென்னும் கடலுள் ஆழ்ந்த பெருமக்கள் காவியத்தில் பலருளர். இவனது ஒப்பற்ற திருவடிவின்

---

நண்பன் என்றால் நண்பனுடைய குறைகளைப் பொறுப்பவனாக இருக்க வேண்டும்.

ஒருவடிவைக் கண்டவர் அவ்வடிவிலேயே ஈடுபட்டு நின்ற நிலையைக் கவியரசர் கம்பர்போற்றியுரைக்கும் மாற்றம் கற்றோர் உளத்திற்குக் களிபேருவகை தருவதாகும். இராமன், மிதிலைமாநகர் செய்த மாதவத்திற்கு இரங்கி, மையறுமலரின் நீங்கி அந் நகரில் வந்து வதியும் செய்யவளை மணம்புரிய உலாப் புறப்படுகின்றான். இவன் உலாவருகின்ற பான்மையைக்கண்டு களிப்புறப் பெண்கள் ஓடிவரும் நிலையை "மானினம் வருவபோன்றும், மயிலினம் திரிவபோன்றும், மீனினம் மிளிர்வ போன்றும், மின்னினம் மிடைவபோன்றும், தேனினம் சிலம்பி யார்ப்பச் சிலம்பினம் புலம்ப, வெங்கும் பூநனை கூந்தல்மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்" என்று கம்பர் நயஞ்சான்ற மொழிகளால் போற்றி யுரைக்கின்றார். இன்னும்

"தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார், தடக்கைகண் டாரு மஃதே,
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னான் உருவுகண்டாரை யொத்தார்"

என்று உலாக்காணப் போந்த மங்கையர் மனநிலையை அழகாக எடுத்துரைத்து அதனால் இராமனது மெய்வண்ணத்தின் மெய்ப்பெருமையினை விளக்கும் கம்பர் கவிநலம் சாலவும் அழகுடையதாகும். இன்னும் "ஆடவர் பெண்மையை யவாவும் தோள்களை யுடையவன் இராமன்" என்று கவிகூறுந் திறன் நயஞ்சான்றதாகும். இம்மட்டன்று. இவ்விராமனைக்கண்டு காமுற்று அதனால் தன் மூக்கிழந்து நின்ற அரக்கர்கோன் தங்கையும் தன் தமையனிடம் சீதையின் அழகினை அழகாக எடுத்துரைக்கின்றாள். அரக்கர்கோனும் தன் தங்கை கற்பித்த சீதையின் உருவத்தையே, தன்முன், உருவெளித் தோற்றத்தில்கண்டு, அத்தோற்றம் சீதையின் உருவா அன்று என்றறியத்தன் தங்கையை அழைத்து

"மைந்நின்ற வாட்கண் மயில்நின்றென வந்தென் முன்னர்
இந்நின்ற வளாங்கோல் இயம்பிய சீதை"

என்று வினவ அண்ணலை மறவாத அணங்கும், தான் தனது உருவெளித் தோற்றத்தில் காணும் இராமனது அழகையேபோற்றி யுரைக்கின்றாள்.

"செந்தாமரைக் கண்ணொடும் செங்கனி வாயினொடும்
சந்தார் தடந்தோளொடும் தாழ்தடக்கைகளொடும்
அந்தார கலத்தொடும் மஞ்சனக் குன்றமென்ன
வந்தானிவனாகும் அவ்வல் வில் இராமன்"

என்று கவி கூறுந்திறன் கம்பருடையதேயாகும். இன்னும் இராமனது வரம்பில் பேரழகை எடுத்தெடுத்துரைப்பது மிகைபடக்கூறல் என்னும் குற்றத்தின்பாற் படுமென அஞ்சி இத்துடன் நிறுத்தி மேற் செல்லுதும்.

இராமனது மெய்வண்ணத்தை நலமிக்க மொழிகளால் எடுத்துரைத்த கவியரசர் அவனது கை வண்ணத்தைப் போற்றுந் திறன் நாம்கண்டு மகிழ்வதற்குரிய ஓர் இடமாகும். முற்றுந்துறந்த முனிவரது வேள்விகாக்கப் போந்த வீரர் இருவரும் அவ்வேள்வியைக் "கண்ணினைக் காக்கின்ற இமையாற் காத்து

மன்னித்து உவக்கும் இன்பம் அறியாத அன்பு குறைவுபட்ட அன்பேயாகும்.

வந்தனர்" என்பது வெளிப்படை. முனிவர் தம் பணியைத் தலைமேற் கொண்ட காகுத்தன் வேள்வியைக் காத்ததோடு அமையாது அவ்வேள்வி செய்வதற்கு இடையூறாய் அமைந்த தாடகையையும் அவள் தன் மக்களாம் மாரீசன் சுவாகுவையும் அழித்து அறம் நிறுவிய பெருமையைப் போற்றி யுரைக்கும் கம்பர் கவிநலம் சாலவும் அழகுடையதாகும்.

"சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல், அல்லொக்கும் நிறத்தினாண்மேல் விடுதலும் வயிரக்குன்றக், கல்லொக்கு நெஞ்சிற்றங்காதப் புறம் கழன்று கல்லாப், புல்லார்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று" என்னும் நயஞ்சான்ற மொழிகளால் இராமன் எய்த வாளியின் திறம் கூறிப் பின் அவ்வொரு வாளி "உலையுருவக் கனலுமிழகட்டாடகை தன் உரமுருவி, மலையுருவி, மரமுருவி, மண்ணுருவிற்று" என்று முடித்துக் கொடுக்கின்றார் கவியரசர்.

இவ்வாறு தாடகையை முடித்துத் தன் கைவண்ணம் காட்டிய அண்ணல்தன் கால்வண்ணம் காட்டவிரைகின்றார் கவியரசர். அவ்வியம் அவித்த சிந்தை முனிவனும் கோதமனது மனைவியாம் அகலிகையை அமரர் கோமான் வஞ்சனையாய்க் கவர்ந்து அவன் தன் நிறையழித்து நின்றதும், அதனால் கோப முற்ற முனிவர் பெருமகனது சாபத்தால் இந்திரன் ஆயிரங்கண் பெற்றதும், அகலிகை கல்லாய் அமைந்ததும், கல்லாய் அமைந்த காரிகை காகுத்தனது பாததூளியின் பரிசமெய்தத் தன்னுரு வெய்தினள் என்பதும் கர்ணபரம்பரைக் காதை.

"அஞ்சனவண்ணத் தான்றன் அடித்துகள் கதுவாமுன்னம்
வஞ்சிபோ லிடையாள்முன்னை வண்ணத்தாளாகி நின்றாள்"

என்று கவியரசர் கூற்றாகக் காதை அமைந்துள்ள பெருமையே இராமனது கால் வண்ணத்தை விளக்கப்போதிய சான்றாம். "தீவினை நயந்துசெய்த தேவர் கோன் தனக்குச் செங்கண், ஆயிரம் அளித்தோன் பன்னி"யாய அகலிகைக் குத் தீதிலா உதவி செய்த சேவடியின் வண்ணத்தையும் இடித்த வெங்குரல் தாடகையாக்கையை முடித்த இவனது கைவண்ணத்தையும் முனிவர் எடுத் தெடுத்தியம்பி மகிழ்கின்றார்.

இன்னும் ஆற்றல் மிகுந்த அரனது வில்லை வளைத்து நாணேற்ற முடியாது மன்னர் பலர் மயங்கி நிற்க, வேள்வி காணவந்த மன்னர் மைந்தன் வில் லுங் கண்டு அவ்வில்லை ஒடித்தெறிந்த பான்மையை உன்னும்போது யாரே அவனது கைவண்ணத்தைக் கணிக்க வல்லார். "வெள்ளமணைத்தவன் வில்லை யெடுத்துப் பிள்ளை முன்னிட்ட பேதமைக்காக" இரங்குவோர் பலரிருக்க வும் இராமன் அவ்வில்லை தன் தடக்கைளில் எடுத்த தன்மையை

"ஆடகமால் வரையன்னது தன்னைத்
தேடருமா மணிச்சீதை யெனும்பொற்
சூடக வாள்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ்மாலை யிதென்ன எடுத்தான்"

என்று நயஞ்சான்ற மொழிகளால் எடுத்துரைத்த கவியாசர்

---

மனிதன் இறப்பதற்குத் தகுந்த இட ... பிறனுக்காக இறக்கும் இடமே.

"தடுத்திமை யாமலிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதிவைத்தது நோக்கார்
கடுப்பினில் யாருமறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்"

என்னும் செம்மைசான்ற மொழிகளால் இராமன் வில்லிறுத்த அழகினைப் போற்றி யுரைக்கின்றார். இராமன் தனது இளமைப்பருவத்தில் தன் கை வண்ணம் காட்டப்புகுந்த ஒரு செயலாக இவ்வில்லிறுத்துத் தன்வினை முடித்த செயல் அமைந்துள்ளது போற்றத்தக்கதொரு பொருளாகும்.

இதுவரை இராமனது மெய்வண்ணம், கால்வண்ணம், கைவண்ணம் இவைகளில் ஈடுபட்டிருந்த, நாம், இனி இவனது சொல்வணணத்தைச் சிறிது ஆராய்வோம். "சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்" என்று கவி யரசர் கூறும் உண்மையில் இராமனது சொல்வண்ணம் அமைந்துள்ளது என்று யான் கூறுவேனேயானால் அது ஒரு சிறிதும் மிகையாகாது. இராம னது சொல்வன்மை எவ்வளவில் அமைந்துள்ளது என்பதை ஒன்றிரண்டு குறிப்புகளால் விளக்கி இக்கட்டுரையை முடிக்க விரைகின்றேன்.

மன்னர் மன்னனிடம் வரம்பெற்ற கேகயர் கோமகள் "நாயகன் உரை யான் நானிது பகர்வேன்" என்று, தன் முன் வந்த இராமனிடம்

"ஆழிசூழுலகமெல்லாம் பரதனேயாள நீபோய்த்
தாழிருஞ்சடைகள் தாங்கி தாங்கருந் தவமேற்கொண்டு
பூழிவெங்கானம் நண்ணிப் புண்ணியத் துறைகளாடி
ஏழிரண்டாண்டின் வாவென் றியம்பினன் அரசன்"

என்று கூறுகின்றாள். இராமன் தன் தாதை தயரதன் ஒருநாளும் இவ்வாறு விதித்திரான் என்பதை உணர்ந்தவனாய் "அம்ம! இது நின் சூழ்ச்சியே யாக வேண்டும். பரதன் நாடாளவேண்டு மென்பதே உன்னுடைய விருப்ப மாயின் அதற்குயான் ஒருகாலும் எதிர் சொல்லேன். ஆதலின் உன் எண் ணத்தை உன்னுரை யாகவே சொல் "பாவம் ஓரிடம் பழியோரிடம் என்பதே போல் பழியைக்கொண்டுபோய் பாவம் தயரதன்மேல் சுமத்த வேண்டாம்" என்று சொல்வதில் எவ்வளவு வன்மையுண்டோ அவ்வளவு வன்மையையும் உள்ளடக்கி "மன்னவன்பணி யன்றாகில் நும்பணி மறுப்பனோ" என் றிறைஞ்சி நிற்கின்றான். இன்னும் தன்னை விடாது தொடர்ந்து தன் பணி யையெல்லாம் செய்துவரும் இலக்குவன் தானொருவனே சகோதரபக்தி மிக் குடையவன், தன்னிலும் பரதன் தாழ்ந்தவனே யாகல்வேண்டும் என்று எண் ணிக்கொண்டிருக்கும் அவனது செருக்கை அடக்க எண்ணி அவனது முன் னிலையிலேயே

"எத்தாயர் வயிற்றில் பின்பிறந்தார்கள் எல்லாம்
ஒத்தால் பரதன் பெரிதும் உத்தமனாவ துண்டோ"

என்று இராமன் கூறும் செம்மைசான்ற சொற்கள் அவனது சொல்வன்மை யைப் பெரிதும் விளக்குவதாகும். இன்னும் வீணைக்கொடியோன் வீரத்தம்பி

---

சிரிப்பில் எவ்வளவு அடங்கியிருக்கிறது! மனிதனை முழுதும் அறிந்து கொள்வதற்குரிய திறவுகோல் அதுவே.

யான விபீடணன் அடைக்கலம் என்று தன்னை வந்தடைந்த காலையில், இராமன் சுக்கிரீவனைப் பார்த்து "கோதிலாதவனை நீயே என் வயின் கொணர்தி" என்றுரைக்கும் மாற்றம் சாலவும் அழகுடையதாகும். தன்னுடன் பிறந்த முன்னவனைப் பகைவனிடம் காட்டித்தரும் தகவிலாச் செய்கை செய்பவன் வீபிடணன் மட்டுமல்ல நீயுமுளாய் ஆதலின் நீயே நின்னினத்தைச் சென்று அழைத்துவா என்று நயம்பட உரைத்த செஞ்சொற்கள் நாம் கண்டு மகிழ்வதற்குரிய ஓர் இடமாகும். இவ்வாறு "வாழையுள் ஊசியைவைக்குமாறுபோல் தாழ்மையாம் சொற்களால் தைப்பதே" இராமனது சொல்வன்மையின் திறம் என்று அன்பர்கள் தவருக நினைத்து முடிவு செய்யவேண்டாம்.

"காழ்முதிர் தடியெனக் கடிந்த சொற்களாலும்" இராமன் தனது சொல் வன்மையைக் காட்டியுள்ளான் என்பது வெள்ளிடைமலை. ஐயிரண்டு திங்களாய்த் தனது உயிரனைய கொழுநனைப் பிரிந்து ஆற்ருத் துயர்க்கோர் அருமிரையாய் மாழ்கிப் பின் கொடுந்தொழில் இராவணன் மாய்ந்திடச் சிறை நீங்கிச் சிறந்தோங்கு முவகையொடு வந்த கற்பினுக்கரசினைப் பெண்மைக் காப்பினை பொற்பினுக்கு அழகினைப் புகழின் வாழ்க்கையைத் தற்பிரிந்து அருள்புரி தருமம் போலியை அமையநோக்கி அக்கற்பின் வாழ்வனையவள் அணங்குறு நெடுங்கண் நீராறுவார வணங்குங் காலையில் பச்சிலை வண்ணமும் பவளவாயுமாய் கைச்சிலையேந்தி நின்ற ஒருவீரன், பணங்கிளர் அரவென எழுந்து

"குலத்தினிற் பிறந்திலைகோளில் கீடம்போல்
நிலத்தினிற் பிறந்தமை நிறப்பினையோ"

என்று சீறினனென்ருல் அவன் விடுசரமோ வாய்ச் சொல்லோ வெம்மையுடைத்து என்பதை அன்பர்களே உற்றுநோக்குங்கள். இராமனது சொல் வன்மையின் திறமறிய இதுவரை எடுத்துக்காட்டிய சான்றுகளே அமையும்,

இதுகாறும் கூறிய ஒரு சிலசான்றுகளால் அண்ணல்தன் வண்ணம் அவனது கைவண்ணம் கால்வண்ணம் இவைகளோடு மட்டும் அமையாது அவனது மெய்வண்ணமாயும், சொல்வண்ணமாயும் இலங்க அமைத்த பெருமை கம்பருடையதே யாகும் என்று கூறி என்பணி முடிக்கின்றேன். திருவருள் முன்னிற்க—சுபம்.





பணம் தேடுவது ஒரு பெரிய காரியம். அதைவிடப் பெரிய காரியம் தேடிய பணத்தைக் காப்பாற்றிக்கொள்ளுவதே.

# கனவின் பலன்

(வி. சங்கா ஐயர்.)

(842-ம் பக்கத் தொடர்ச்சி)

## CHAPTER V.

1 அக்கினியைக் கனவில் பார்ப்பது நல்லது.

2 அடிக்கடி அக்கினியைக் கனவிற் பார்ப்பவர்கள் அதிக கோப முடையவர்களாக யிருப்பார்கள்.

3 (a) வியாதியஸ்தர் புகையில்லாத அக்கினி எரிவதைக்கண்டால் சீக்கிரம் வியாதியிலிருந்து சொஸ்தமாவார்கள்.

(b) அதை மற்றவர்கள் கண்டால் தனலாபம்.

4 நோயாளி கரி, சாம்பல், சுண்ணும்பு, இவைகளைக் கண்டால் நோய்நீங்கும்.

5 மாடியிலிருந்தோ மலையுச்சியிலிருந்தோ அதிக தூரத்திலுள்ள ஊர்களில் பிரகாசமாக விளக்குகள் எரிவதைக் கண்டால் தன் ஆயுட்காலம் பூராவும் கஷ்டமே யிராது.

6 தீவட்டி, பிரகாசமாக எரியும் விளக்கு—இவைகளைப் பார்த்தால் காரியசித்தி, சந்தானப்பிராப்தி, பொருள் லாபம் விவாஹப்பிராப்தி, நல்ல பெயர்- இவை கிடைக்கும்.

7 தீவட்டி, விளக்கு தன் கையிலிருப்பதாகக் கண்டால் எல்லா ஆபத்தும் நீங்கும், புகழும் கிடைக்கும்.

8 வேறொருவர் தனக்காக விளக்குப் பிடிப்பதைப் பார்த்தால் தன் விரோதிகள் நாசம்.

9 தீவட்டி, தீப மிவைகளைத் தான் கொளுத்தினல் நற்சந்தான விருத்தி-குடும்பவிருத்தி.

10 ஒரு கூட்டத்தின் நடுவில் தான் விளக்கு, தீவட்டி இவைகளைக் கொண்டு போவதாகக் கனவு கண்டால் நல்லபெயர் கிடைக்கும்.

11 வீடு எரியும் பொழுது புகையில்லாமல் பிரகாசமாக எரிவதாகக் கண்டால் விசேஷ லாபம். ராஜசன்மானம்.

12 சாவடி, கச்சேரி, பந்தல், தூண்கள் புகையில்லாமல் எரிவதைப் பார்த்தால் யசஸ்.

13 தான் படுக்கிற மெத்தை புகையில்லாமல் எரிகிறதை மாத்திரம் பார்ப்பதால் பாராட்டுதல் கிடைக்கும்.

---

எல்லாரும் துக்கத்தைப் பொறுத்துக்கொள்ள முடியும்—துக்கமுடையவனைத் தவிர.

14 தானியக் குவியல் எரிவதாக மாத்திரம் பார்த்தால் நல்ல விளைவு.

15 புகையுடன் கூடிய அக்கினியைப் பார்ப்பது மிகவும் கெடுதி. விரோதிகள், வியாகூலமான சமாசாரம் பலனாகும்.

16 சோதி மங்கின விளக்கு தீவட்டி இவை ரோக ஹேது.

17 தான் விளக்குக் கொளுத்தும்போது அணைந்ததாகக் கண்டால் அதிககஷ்டம், புத்திரசோகம்.

18 புகையோடு வீடு எரிவது விநாசகாலம்.

19 புகையோடு சமயல்வீடு எரிவது சமைப்பவளுக்கு நோய்.

20 கூரை புகையோடு எரிந்தால் கள்ளர்களால் நஷ்டம்.

21 வீட்டில் வாசல், ஜன்னல் எரிந்தால் வீட்டிலுள்ளவர்களுக்குக் கெடுதி; அல்லது கண்டவனுக்கு கெடுதி.

22 வீட்டின் பின்பாகம் எரிவதாகக் கண்டால் வீட்டிலுள்ள முக்கிய ஸ்திரீக்குக் கெடுதல்.

23 தூண்கள் புகையோடு எரிந்தால் பிள்ளைகளால் பூராச் சொத்தும் தொலையும்.

24 தன் பந்துக்கள், சினேகிதர்கள் ஆடை தீப்பட்டதாகப் பார்த்தால் அவர்களுக்குக் கெடுதி,

25 தன் உடம்பு எரிவதாகக் காண்பது ரோகம், மனோ வியாகூலம், சத்துருக்கள் அதிகம் ஏற்படும்.

26 கை, கால் விரல்கள் எரிவதாகக் காண்பது தான் முயற்சிக்கும் வேலை கிடைக்காது.

27 ஊரெல்லாம் எரிவது பஞ்சம், தொத்து வியாதி.

## CAHPTER VI.

1 கடலைக் கடப்பது மதிப்பான உத்தியோகம்.

2 கப்பல் ஏறினால் தூரதேச யாத்திரை.

3 தெளிவான நீருள்ள குளம் ஆறு முதலியவை காரியசித்தி, சரீர சௌக்கியம்.

4 ஜலத்தை கொப்பளித்து உமிழ்ந்தால் ஆபத்து, நோய் இவை நீங்கும்.

5 தலை மேலாகவைத்து நீந்துவது காரியசித்தி.

6 ஜலம் நிறைந்த குளத்தின் நடு மண்டபத்தில் தாமரையிலையில் தயிர் அன்னம் சாப்பிட்டால் ராஜ்யலாபம்.

7 ஜலம் நிறைந்த அசையாத குளத்தைப் பார்ப்பது மிகவும் நலம்.

8 தண்ணீரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தால் பொருள் லாபம்.

---

பட்டங்கள் தம்மை விரும்புவோரிடமிருந்து பறந்துவிடும். ஆனால் தம்மை வெறுப்போர்க்குப் பின்தொடரும் நிழல்களை ஒக்கும்.

9 ஜலத்தில் சந்தோஷமாக மிதந்துபோவதாகக் கண்டால் சுகஜீவனம்.

10 ஓடத்தில், அல்லது தெப்பத்தில், நிர்மலமான ஜலத்தில் போவது எவ்வித காரியமும் சித்தியாகும்.

11 நீரிலுள்ள பாசை காலைச் சுற்றினுல் தனலாபம்.

12 தன் வீட்டுப் பக்கம் நதி ஓடுவதாகக் கண்டால் உத்தியோக மேன்மை.

13 பிரவாகம் வந்து வற்றினுல் கஷ்டங்கள் நீங்கும்.

14 பயிருக்கு ஜலம் பாய்ச்சுவது தனலாபம்.

15 நிர்மலமான கிணற்றைப் பார்ப்பதும் தனலாபம்.

16 தான் ஜலம் எடுப்பதாகக் காண்பதும் தனலாபம், கல்யாணப் பிராப்தி, ஸ்திரீமூலம் தனலாபம்.

17 குளிர்ந்த நீர் குடிப்பது நல்லது.

18 குளிர்ந்த ஜலம் மற்றொருவருக்குக் கொடுப்பது சந்தான விருத்தி.

19 கடற்கரையில் அலைகள் தன்னைச் சூழ்ந்து கொண்டதாகக் காண்பது அதிகக் கஷ்டஹேது.

20 ஏரி, குளம் ஆறு இவைகளிலுள்ள நீர் அழுக்கானுல் வியாதி, காரியஹானி.

20 (a) அதில் கால் கழுவிக்கொள்வது கஷ்டஹேது.

20 (b) அழுக்கு ஜலத்தைச் சாப்பிடுவது துக்கம், வியாபார நஷ்டம், காரியஹானி, சிறைச்சாலை வாசம், பிறருக்குத் தெரியாமல் ஒளிந்து நடக்க நேரிடும்.

21 ஜலத்தில் தலைகவிழ்ந்துகொண்டு நீந்துவதாகக் கண்டால் வியாபாரிகளுக்கு நஷ்டம், மற்றவர்களுக்கு இடையூறு. குடும்பத்தாருக்கு அபகீர்த்தி.

22 அழுக்கு நீரிலுள்ள குளத்தில் தெப்பத்தில் போவதாகக் கனவு கண்டால் அனேக நோய்கள் உண்டாகும். ஆபத்துகள் நேரிடும்.

23 மழை பொழிந்தாற்போலாவது வெள்ளம் வந்தாற்போலாவது கனவு கண்டால் தன் குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்கு வியாதி, அல்லது கஷ்டம் அல்லது விசனம் உண்டாகும்.

24 கிணறு நிரம்பித் தண்ணீர் வழிந்து கீழேபோவது பொருள் கஷ்டம், சினேகர்களிலோ பந்துக்களிலோ மரணம், தன் மனைவி அல்லது புருஷன் மரணம்.

25 அழுக்கு ஜலம் எடுப்பதாகக் கண்டால் தீராத கஷ்டம் உண்டாகும்.

26 அழுக்கு ஜலம் அன்னியர்களுக்கு கொடுத்தால் சேவகர் விருத்தி.

27 அழுக்கு ஜலத்தில் ஸ்நானம் செய்தால் நோய்.

28 வெந்நீர் ஸ்நானம் துக்கம்.

---

செய்தது தவறுனுல் செய்தபின் அதற்காக வருந்துதல் தவறாகும்.

29 ஸ்நானம் செய்ய என்று வஸ்திரத்தை அவிழ்த்து வைத்துவிட்டு பிறகு ஸ்நானம் செய்யாவிட்டால் மனக் கஷ்டம்.

30 சுடு ஜலம் அருந்தினுல் கஷ்டம், அதிகச் சூடானுல் அதிகக் கஷ்டம்.

31 தண்ணீர் குடிக்கும்பொழுது செம்பு தவறி விழுந்துவிட்டால் தன் ஆப்த சினேகிதர்களுக்கு வருத்தம் உண்டாகும்.

32 ஒழுகும் சாமானில் ஜலம் கொண்டுபோவதாகக் கண்டால் ஆபத்துண்டாகும். நம்பியவர்கள் தன்னை மோசம் செய்வார்கள். சோரர்களால் நஷ்டம்.

33 ஜலத்தில் குப்பை கொட்டியதாகவோ, ஜலத்தினுல் சுவர் முழுகிப் போனதாகவோ கனவு கண்டால் கஷ்டகாலம் நெருங்கியிருப்பதாக அறியவும்.

84 அப்போது தண்ணீர் குடிப்பதாகக் கண்டால் அதிகக் கஷ்டம்.

35 வீட்டில் அழுக்கு ஜலம் தெளித்தாற்போல் கண்டால் அனேக கஷ்டங்கள் சம்பவிக்கும்.



திருடிய பணத்தைப் புதைத்து வைப்பதற்காகக் குழி தோண்டிய ஒரு திருடன்:—"குழி இவ்வளவு ஆழம் தோண்டினது போதுமா?"

மற்றவன் :—" இன்னும் இரண்டடி தோண்டுடா மடையா! 'பணம் பாதாளமட்டும்' என்னும் பழமொழி கூட நீ கேட்டதில்லையா ?"

நண்பன் எனப்படுவான் இரண்டு உடம்புகளில் ஒரு ஆன்மா ஆவான்.

ஜைப் அஷ்யூரென்ஸ் என்கிற

# ஜீவிய ஊர்ஜிதம்.

(இன்ஷியூரென்ஸ்.)

தமிழில் ஒரு கதை உண்டு. ஒரு மனிதன் பண்டைக்கால நாகரிகத்தை யொழித்துவிட்டு நாஸ்திகனுகவும், தேசாசாரத்தில் பற்றற்றவனுகவும் இருந்தான். அவன் மனைவி தெய்வ பக்தியுடனும் குடும்ப முன்னேற்றத்தில் கருத்துள்ளவளுமாக விருந்தாள். அவள் காலையில் வீட்டைச் சாணத்தைக்கொண்டு சுத்தம்செய்து கோலமிட்டுக் கடவுளைத் தியானித்து ஒரு சிறு நெய் விளக்கு ஏற்றுவது வழக்கம். இதைக்கண்ட புருஷன் வெகு கோபங்கொண்டு அவளைப் பயமுறுத்தி வீட்டைச் சுத்தம் செய்யக் கூடாதென்றும் சாணமென்கிற பேச்சே கூடாதென்றும் மண்ணெண்ணெய் விளக்கைத் தவிர வேறு எந்தத் தீபத்தையும் ஏற்றலாகாதென்றும் கட்டாயப் படுத்தினுன். அவ்வம்மை அவன் வார்த்தையைச் சிரமேற்கொண்டு நடப்பவளாயினும் தன் தினசரிப் பணிகளே முக்தியைக் குடும்பத்தாருக்குக் கொடுக்குமென்பதை யறிந்து புருஷனுக்குத் தெரியாமல் தன் மூன்ருனையில் ஒரு கழற்சிக்காய் பிரமாணம் சாணத்தை மறைத்து வைத்துக்கொண்டு விடியற்காலத்தில் அதைத் தண்ணீரில் கரைத்துத் தெருவைச் சுத்தம்செய்து வந்தாள். புருஷன் எழுந்திருப்பதற்குள் அது உலர்ந்து விடும். ஒரு குடத்தில் நெய் விளக்கை ஏற்றிவைத்து விட்டாள். புருஷனுக்கு மனைவி தன் பேச்சைக் கேட்கிருள் என்ற திருப்தி யேற்பட்டது. மனைவிக்குப் புருஷனுக்குக் கோபமில்லாம விருக்கிற தென்ற சந்தோஷம். குடும்பத்திற்கும் லக்ஷ்மி கடாக்ஷத்திற்குக் குறைவில்லை.

ஜைப் இன்ஷ்யூரென்ஸ் விஷயமாக அனேகர் அதன் அவசியத்தை யறியாமல் அதைத் தூஷிக்கிருர்கள். அனேகர் தங்கள் மனைவிமார் இன்ஷியூரென்ஸ் என்ருல் மாண பண்டு என்று பயப்படுவதாகவும், அவர்கள் மனத்திற்கு விரோதமாகத் தாங்கள இன்ஷியூர்செய்ய இஷ்டமில்லை யென்றும் சொல்லுகிருர்கள். ஆனுல் அவர்களுக்கு இன்ஷியூர் செய்வதற்கு மனம் இருக்குமேயாகில் மனைவிமார் அல்ல யார் சொன்னுலும் இன்ஷியூர் செய்தே தீருவார்கள். அப்படிச் செய்வதன் நன்மையை நன்குணர்ந்தோர் வீட்டி விருப்பவருக்குத் தெரியாமலாவது இன்ஷியூரென்ஸ் பத்திரமொன்றைக் கொள்ளுவாரேயன்றி சால்ஜாப் சொல்லமாட்டார்கள். மனைவிமார்களுக்காவது குழந்தைகளுக்காவது வீட்டு எஜமானன் உயிருட னிருக்கும்போது ஒரு குறைவுமில்லை. அவர்கள் குடை நிழலி லிருக்கும் மனிதனுக்கு சூரிய வெப்பம் தெரியாததுபோல் உலகத்தில் கஷ்டமே யில்லை யென்று நினைக்கிருர்கள். ஆனுல் அவர் கண்ணை மூடிக்கொண்டால் குட்டு வெளிப்படுகிறது. ஒரு

---

அடக்கமும் அன்பும் துன்பத்தால் கற்றுக்கொள்ளப்படும்.

மனிதன் சம்பாதித்ததால்தான் மற்றவர் சாப்பிடுவதும் அங்கி தரிப்பதும் சந்தோஷமாக விருப்பதும் கூடுமென்று தெற்றெனப் புலப்படுகிறது.

குழந்தைகள் தகப்பனர் வெளியிலிருந்து வீட்டிற்குத் திரும்பி வரும்போது "அப்பா என்ன கொண்டு வந்திருக்கிறீர்" என்று கேட்பது வழக்கம். சில குழந்தைகள் தமது தகப்பனர் சொக்காய்ப் பைகளில் ஏதேனும் இருக்கிறதா என்று தேடிப் பார்ப்பது வழக்கம். இவ் வழக்கத்தின்படி தகப்பனர் காலமான பிறகு அவருடைய பெட்டிகளைத் திறந்து பார்த்துத் தம்முடைய ஆதரவுக்கென்று பணமு மில்லாமல் பத்திரங்களுமில்லாமல் இருந்தால் அவர்கள் மனம் படும் பாடுதான் என்னே! தம் குழந்தைகள் கண்ணீர்விடடுக் கதறுவதைக் கண்ணுற்று வாளா விருக்கும் தந்தையரும் உளரோ? ஒருகால் குழந்தைகள் அழும்போது பக்கத்திலில்லா விட்டாலும் அழுகையைக் கேட்டவுடன் பறந்தோடி வருந் தந்தையர் தாம் இறந்துபட்டால் குழந்தைகள் அனாதையாய்த் திரிவார்களே அவர்களுக்கு யார் தேறுதல் கூறுவார்கள் என்று கவலை கொண்டு தாம் இல்லாமல் போனாலும் குழந்தைகளுக்குக் குறைவொன்றுமில்லாம லிருக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும். நாம் சாதாரணமாய் வீட்டைவிட்டுப் புறப்படும்போது வீட்டிற்கு வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டுச் செல்கிறோம். தூரதேசப் பிரயாணத்திற்குமுன் நாம் வீட்டி லில்லாதபோது நடக்கவேண்டிய காலக்ஷேபத்திற்குப் பொதுமான ஏற்பாடுகள் செய்கிறோம். தூர தேசத்திற்குப் போயாவது திரும்பி வரக் கூடும். அல்லது நாம் போகுமிடத்தி லிருந்து குடும்பத்திற்கு வேண்டிய பண மனுப்பலாம். ஆனல் நாம் கண்ணை மூடிக்கொண்டு விட்டால் பணம் அனுப்பமுடியாது. குடும்பத்தின் கஷ்டங்களையும் தீர்க்கமுடியாது. அப்படியிருக்க எவ்வளவு ஏற்பாடுகள் நாம் செய்யவேண்டும்? பிள்ளைகள் படிப்பிற்கென்று வசதிகள் உண்டாக்கவேண்டும். பெண்கள் சீதனத்திற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டும். குடும்பம் உண்ணவும் உடுக்கவும்வேண்டிய பணத்தைச் சம்பாதித்து வைக்கவேண்டும். கடன்களை யொழித்துவிட வேண்டும். அது முடியாவிட்டாலும் கடன்களைப் பின்னல் தீர்க்கவாவது ஐவேஜு வைத்திருக்க வேண்டும். இதெல்லாம் குடும்பத்தின்மேல் பிரீதி யிருக்கும் ஒவ்வொரு மனிதனும் செயயவேண்டிய முக்கிய பணிகள். இல்லையேல் உலகத்தாரிடம் அபவாதத்திற்கு ஆளாக வேண்டியதுதான். "என்ன' குழந்தைகளிடத்தில் அவ்வளவு பிரீதி யுள்ளவனைக் காணப்பட்டானே, குடும்பத்தினிடத்தில் அக்கரை யுள்ளவனக விருந்திருந்தால் இப்படி ஆதாவில்லாமல் விட்டிருப்பானே?" வென்று ஊரார் ஏசுவார்கள். ஊராருக்கு என்ன வந்தது நமது குடும்பத்தைப்பற்றி என்று சொல்லமுடியாது. லோக மரியாதையின் பொருட்டுத்தான் நாம் செய்யும் ஒவ்வொரு காரியமும். மற்றோர் முன் கௌரவமாய்ப் பிழைக்கவே நாம் பாடுபடுகிறோம்.

குடும்ப ஆதாவிற்கு ஏற்றது இன்ஷியூரென்ஸ் பாலிஸியே. முதல் சந்தா கட்டினவுடன் அது எவ்வளவு சிறிய தொகையா யிருக்கட்டும் ஒரு பெரிய நிதி யேற்பட்டு விடுகிறது. நாம் இறந்தாலும் இருந்தாலும் இந்தத் தொகை குறைவதில்லை. வளர்ந்துகொண்டே போகிறது. இந்நிதி ஒரு மாமரத்தைப் போன்றது. விதையை நடும்போதே இது பெரிய மரமாகும் என்று நிச்சய

---

முதலில் மானத்தை நாடு—பின்னல் இன்பம் உளது.

மாய்த் தெரியும். நிலமும் நல்ல பலன்தரக் கூடியதாயிருந்து விதையும் நல்ல ஜாதி விதையா யிருந்தால் ஏன் மரம் வளராமற் போகிறது? நாம் அவ்வப் போது தண்ணீர் கொட்டிக்கொண்டே யிருக்கவேண்டிய கஷ்டமொன்று தான். விதை போட்டவுடன் பழம் உண்டாவ தென்பது முடியாத காரியம். பருவகாலத்தில்தான் மரங்கள் பலிதம் தருகின்றன. அதேமாதிரி பணம் கட்டாயம் வரும் என்றிருந்தபோதிலும் அப் பணம் நினைத்தபோது எதிர் பார்த்தால் வராது. கண்கட்டு வித்தையா யிருந்தால் மந்திரக்காரன் கொட்டையைப் போட்டவுடன் "இதோ முளைத்துவிட்டது செடி!" என்கிறாப் போல் நாமும் பண நிதியைப் பெறலாம். ஆனால் மந்திரக்காரன் மரத்தின் அழகு எப்படியென்று நமக்குத் தெரியும். நமது பணம் அப்படி வராதிருப் பதே நமக்கு சந்தோஷத்தை யுண்டாக்கும். மரம் தானாகவே வளர்ந்து பூத் துக் காய்த்துப் பழுத்தால்தான் பயிரிட்டவனுக்குத் திருப்தி. பயிரிட்டவன் உயிருடன் இல்லாவிட்டாலும் அவனுடைய ஆத்மாவிற்கு திருப்தி. ஒரு மனி தனும் மரம் நடும்போது தான் இருந்து பழங்களை அனுபவிக்கப் போகிறான் என்று எதிர்ப் பார்ப்பதில்லை. மரம் விஷயத்தில் மாத்திரம் இப்படி யிருப்ப தென்ன? பணம் விஷயத்தில் இல்லாம லிருப்பதென்ன? மேலும் பழ விஷ யத்தில் நமது மரத்தின் பழத்தை நம்மவர் அனுபவிப்பார் என்று எதிர் பார்க்க ஹேதுவில்லை. பொதுவாகப் பிறரே, நமக்குச் சம்பந்தமில்லாத பிறரே அனுபவிப்பார் என்று பயிரிடுபவனுக்கே தெரிந்திருக்கிறது. அப்படியிருந்தும் மகிழ்ச்சியுடன் அவன் மரங்களைப் பாதுகாக்கிறான். நாம் இன்ஷியூர் செய் யும் தொகையோ நம்முடைய குடும்பத்திற்கே பிரத்தியேகமானது. மற்றும் மரங்களாவது சுழற்காற்றினால் விழுந்து விடலாம். விஷப் பூச்சிகளினால் அரிக்கப்படலாம். கால மழை யில்லாமல் பட்டுப் போகலாம். ஆனால் இன் ஷியூரென்ஸ் நிதியோ அழிவற்றது. சந்தாக்கள் மாத்திரம் விடாமல் கட்டிக் கொண்டே யிருந்தால் நமது மூலதனத்திற்கு என்றைக்கும் மோசமில்லை. இந்திய மக்களாகிய நாம் எல்லோரும் இவ் வின்ஷியூரென்ஸ் முறையை மேன்மேலும் அனுசரித்து அதன் பயன்களை அனுபவித்து குடும்பத்திற்குக் குறைவுபடாத ஆதரவு நமக்குக் கிலேசமற்ற சந்தோஷம் தேசத்திற்கு அளவு கடந்த அனுகூலம் இவைகளை ஸ்திரப்படுத்த வேண்டும். பாரத அன்னை தன் மக்களின் ஏழ்மையும் துன்பமும் கண்டு கண்ணீர்விட்டுக் கதறுகின்றாள். அவளுடைய மனக் குறையைத் தீர்க்க நாமே அல்லவோ பாடுபட வேண்டும்? இதை எப்படிச் சாதிப்பது? அவள் மக்களின் வறுமையைப் போக்கவேண் டும். இதற்கு என்ன வழி? இன்ஷியூர் செய்யவேண்டும். அன்பர்களே! நிர்ப்பயமாய் இன்ஷியூர் செய்து நமது அன்னைக்கு ஆறுதல் கூறுங்கள். மற்ற தேசங்கள் மேன்மை யடைந்திருப்பது இன்ஷியூரென்ஸ் நிதிகளாலேயே. இக்காலத்தில் இதையே யாவரும் கைக்கொண்டிருக்கிறார்கள். நாமும் இதைக் கைக்கொள்ளுவோமாக. கடவுள் இதற்குக் கிருபை செய்வாராக.

(தொடரும்)

[குறிப்பு:—லைப் இன்ஷ்யூரென்ஸைப் பற்றி விவரமாக அறிய விரும்பு வோர் 'ஆனந்தபோதினி' வாரப் பதிப்பில் வெளியாகும் கட்டுரைகளைப் படிக்கலாம்.]

---

தலை சுழல்பவன் தரணி சுழல்வதாக நினைத்துக்கொள்ளுகின்றான்.



# ஆரியசித்தாந்தம்

## கலிகாலக் கலியாணக் கோலாகலம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்.)

ஐயன்மீர்! மேற்குக் கடற்கரையோரத்தி லிருக்கும் மலையாள நாட்டைப்பற்றி நீங்கள் கேள்வியுற்றிருக்கலாம். அந்நாட்டில் நம்பூதிரிப் பிராமணர் என்ற ஒரு வகுப்பினருண்டு. அவர்களுடைய குடும்பங்கள் மலைநாடெல்லாம் விசாரித்தால் எழுபது அல்லது எண்பதே யிருக்கும். இக் குடும்பங்களுக்குள் அநேக வேற்றுமைகளுண்டு. இவற்றில் சகோத்திரம் என்பதை யொழித்திட்டால் ஒவ்வொரு குடும்பத்திற்கும் விவாக சம்பந்தத்திற்கு யோக்கியமான வீடுகள் நான்கு அல்லது ஐந்தே இருக்கும். மேலும் ஒரு குடும்பத்தில் வயதில் மூத்தவனுக்கே விவாகம். மற்றவர்களுக்குக் கூடாது என்ற கட்டுண்டு.

மேற்கண்டபடி ஒவ்வொருவர்க்கும் சம்பந்தம் புரிவதற்கு யோக்யமான வீடு நான்கு. ஒரு வீட்டிற்கு ஒருவனே விவாக யோக்கியன். ஆகவே ஒரு பெண்ணை ஒருவனுக்குக் கொடுக்க வேண்டுமானால் அவசியம் ரூ. 1000-க்குக் குறையாமல் வரதக்ஷிணை கொடுக்கவேண்டும். ஒரு பொழுதும் பெண்கள் பத்து வயதுக் குட்பட்டு மணஞ் செய்யப்பெறார். சில விடங்களில் பல்லுதிர்ந்து தலை நரைத்த நாயகிக்கும், கோலூன்றி நடக்கும் நாயகனுக்கும் விவாகம் நடைபெறுவதுண்டு. வேதங்களைக் கற்று ஸ்மிருதிகளை அறிந்து சதாசாரங்களை நடப்பிக்கும் ஆற்றல் பெற்று சம்பிரதாயம் வழுவாது நற்புகழ் வேண்டி நீண்டகால தேசாசாரியாய் அக்னிஹோத்ராதிகளை அனுஷ்டித்து, பல யாகங்களைச் செய்து பரவனர்களான அவ்வந்தணர், உயிர் துறந்தவுடனே பெண் பிணங்களுக்கு ஓர் விவாகம் செய்விக்கின்றனர். ஆனால் பழைய பிணத்தை விவாகம் செய்வதில்லையாம். மற்றோ இறந்தவுடனே விவாகமாம்.

இப்பிரேத விவாகத்தில் வரதக்ஷிணை சொற்பங் கொடுத்தால் போதுமாம். ஆகையினால் ஆண்கள் பெண்கள் தங்களுக்குக் கல்யாணம் வேண்டுமானால் உடனே மரித்தால் அந்த க்ஷணம் கழுத்தில் அக்னி சாட்சியாகத் தாலிகட்டப்பட்டதாகும். உடன் பிறந்தவர்கள் பந்துக்கள் அழிவதே வைதிக மந்திரங்கள். பிரமசரி விரதங் கெட்டவனே சுத்தவான். பிரேதவாஹகர்களே, ரித்துவிக்குகள். தகனாக்கினியே சாட்சி. அச்சமயம் பிணக்கொட்டே மங்கள வாத்தியம். மணக்கோல பீடம் பாடையே. 'இவ்வருண பாசத்தை விட்டு உன்னை நீக்குவேன்' என்ற மந்திரத்தால் கன்னிவிரதத்தை யொழித்துக் கழுத்தில் கட்டும் திருமங்கல்ய சூத்திரத்துக்குப் பதிலாகத் தருமாராஜன் பாசம் முன் சம்பந்தப்பட்ட கழுத்தில் இப்பிரமசாரி பிராமணன் கட்டும்

---

பட்டே யானாலும் தூக்குங்கயிறு தூக்குக் கயிறே.

இரண்டாம் பாசம் திருமங்கலியமாம். அச்சமயம் வாரி இறைக்கப்படும் புஷ்பங்களும் பொரிகளுமே கல்யாணுங்கங்கள். கல்மிதிப்பது எரி மூட்டையிலேற்றுவதேயாம். பெரியார் ஆசீர்வாத மென்பது இப்புதிய பிரேத விவாக விதி அநுஷ்டிக்க நேர்ந்ததைக் கொண்டாடும் கொடூர மொழிகளும் கூவென்ற சப்தமுமேயாம். கன்யாலங்காரமோ பிரேதாலங்காரமேயாம். ஆச்சரியம்! இவ் விவாக விதியை எந்த முனிகளும் அறியார். வேதங்களும் அறியா. தரும சாஸ்திரங்களும் அறிந்தில. கன்யாதானத்தில் உள்ள பலன் இதில் இவ்வளவென அளவிட முடியாது. வரனே விஷ்ணுரூபனல்ல, ருத்ரரூபனே. அவனைச் சாக்ஷாத் தென்னுட்டுக்கோன் எனலுங்கூடும்.

ஒரு வழியில் சிறிது வித்தியாசம் செய்தல் வேண்டும்—யாதெனில்—விவாக மந்திரத்தில், 'ஸோமன் கந்தர்வனுக்குக் கொடுத்தான்; கந்தர்வன் அக்னிக்குக் கொடுத்தான்' என்பதை மட்டில், 'ஸோமன் கந்தர்வனுக்குக் கொடுத்தான், கந்தர்வன் எனக்குக் கொடுத்தான், நான் உன்னை அக்னிக்குக் கொடுத்தேன்' என்று மாற்ற வேண்டும்போலும். புமானுகிய சந்தானத்தை நோக்கி, 'உன்னை மணம் புரிவேன்' என்பதற்குப் பதிலாக, 'புத்தன் 'எனும் காசுக்காக' என்று சொல்ல வேண்டும் (புத்தன் என்பது கோள தேசத்துள்ள ஒரு நாணயம்.) ஆனல் பயன் மட்டில்கிழவிக்கும் பிணத்துக்கும் விவாகத்தில் ஒன்றேயாயினும் அக் கிழவிகளுக்கு மூச்சு மட்டிலாவதிருப்பதால் இதிலும் அது மிக விசேஷம்.

பண வாசையினுலே ஒரு பெண்ணை விவாகஞ் செய்துவிட்டு அவர்களிடம் பெண்கள் பிறந்து விடுமோ என்கிற பயத்தால் அவர்களைத் தனிமனைச் சிறையில் அடைத்துவிட்டுத் தமது ஆசிரம தருமத்தையுங் கடந்து அன்னிய ஸ்திரீகளிடம் தமது காமத்தை நிறைவேற்றிக்கொள்கிருர்கள். இவர்கள் நடையைக் கவனியுங்கள். ஒரு வீட்டில் ஒரு புறத்திலே கன்னிகைகளுக்குச் சிறை. மற்ருேர் புறம் கைம்பெண்களுக்கு. வேருெருபுறம் சுமங்கலிகளுக்குச் சிறை.

கன்னிகைகள் ஐயோ எங்களுக்குக் கணவனெவனுங் கிடைக்கவில்லையே யென வருந்துங்கால் அங்குள்ள மற்ற சுமங்கலிகள், "அம்மா! உங்கள் துயரம் ஒன்றே. எங்களுக்குப் பிறந்த வீட்டையும் விட்டுப் பரதந்திரப்பட்ட துயரமும்கூட விருக்கின்றதே என் செய்வோம். வீட்டில் இவ்விதமே காலஞ் செல்கின்றது. திருமணம்செய்த கணவன் சரீரத்தின் சுகுமாரத் தன்மையை அறியக் காலமும் வருமோ?" என ஏக்கமுற்று எதிர்பார்க்கும் பெண்களும் எங்களுக்குப் பெயர்மட்டிலாவது ஒரு கணவனுண்டாவனே என மற்றவரும் வருந்துங்காலத்தில் அன்னிய ஸ்திரீகளிடம் காலதேசங்களை நோக்காது மிருகங்களைப்போல் சஞ்சரிக்கும் தகப்பன், சகோதரன், கணவன் இவர்களையுங் கண்டால் அத்துயரம் எப் பாடுபடும்.

இங்ஙனம் சுமங்கலிகள், கன்னிகைகள், அமங்கலிகள் மூவருக்கும் துயரம் சமமேயாம். அந்தோ, கலி மகாராஜன் செய்யும் ஆடம்பரம் மிகக் கொடிது.

இவ்விதம் நாயக னின்றிக் கிழவிகளாய்ச் சாவதும், அவனிருந்தும் காம சுகமின்றிச் சாவதும், செத்த பிணமாய்த் திருமணக் கோலமடைவதும் எவ்வி

---

தீர்மானிக்க மனம், வழி வகுக்க அறிவு, செய்து முடிக்கக் கை.

தத் தீவினைப் பயனே தெரியவில்லை. இவற்றுள் இரண்டாவதற்கு ஏதேனு மிருக்கலாம். முதலாவதற்கும் மூன்றாவதற்கும் எவ்வித ஏதுவும் தெரிய வில்லை. ஐய, கன்ம விபாக சாஸ்திரத்தைக் கடைசிவரையில் படித்தாலும் எக் கன்மத்தின் பயன் பிரேத விவாகம் என்று சொல்லப்படவில்லை. ஜன்ம கன்னிகையாய் நிற்றலும் பலம் எனப்பட்டதில்லை. அங்ஙனம் சோதிடத்தி லும் எவ்வித கிரக நிலை இவ்வித மாவதற்குக் காரணமென்று குறிக்கப்பட வில்லை. இவ் வுபத்திரவம் கோள தேசாசாரம் என்றும் எடுத்துத் தரும நூல் களிலும் ஓதப்படவில்லை. மேலும் புருஷர்களுக்காவது எந்த தர்ம சாஸ்தி ரத்திலும், எந்தக் கற்ப சூத்திரத்திலும், எந்தப் புராணத்திலும் எந்த ஆப்த வாக்யத்திலும், எந்தத் தந்திரத்திலும், இவ்விதப் பிரேத விவாக விதி சொல் லப்படவில்லை.

விவாகங்கள் ஆறுவகைப்படு மென்றும் எண் வகைப்படுமென்றும் வகுத் தருளிய சூத்திரக்காரர் இவ் விஷயத்தில்மட்டில் தீர்க்கதரிசனத்தை யொழித் தார் போலும்!



போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் டேலிபோன் மூலம் வரும் செய்தியைக் கேட்கிறார்:—

"அடே கொலைபாதகா! பழி ஒருபக்கம் பாவ மொருபக்கம் என்பதுபோல் செய்து வருகிறாயே. இது கடவுளுக்கு ஏற்குமா?"

சர்க்கிள் இன்ஸ்பெக்டர்:—"ஏ! நீ சரியான நம்ப ருடன் பேசு. நீ இப்போது பேசிக்கொண்டிருப்பது சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஆபீஸ்."

உடனே கப்சுப்.



# மேனாட்டுத் தத்துவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

(தொகுதி 16—910-ம் பக்கத் தொடர்ச்சி.)

கிரேக்க தத்துவ ஞானிகளுக்குப் பிறகு அனேக தத்துவ சாஸ்திரிகள் விளங்கினார்கள். ஆனால் அவர்களுடைய ஆராய்ச்சிகள் அவ்வளவாகப் போற்றத்தக்கனவல்ல. மேலும் தத்துவ விருத்திக்கு அவை காரணமாக மாட்டா. ஆகையால் தற்போது அவைகளைப் பற்றி விவரிக்காமல் சென்ற 300 வருடங்களுக்குள் விளங்கிய தத்துவங்களைப் பற்றியே குறிக்க யோசிக்கிறேன். இதற்குமுன், 300 வருஷங்களுக்கு முன் உலகத்தைக் குறித்து ரஸாயன சாஸ்திரிகள் என்ன கண்டுபிடித்தார்கள் என்பதையும், அவர்களால் அபிப்பிராயங்களில் என்ன மாறுதல்கள் ஏற்பட்டனவென்பதையும் சொல்லுகிறேன்.

இதுவரையில் ஜனங்கள் சூரியனே பூமியைச் சுற்றுகிறதென்று நம்பியிருந்தார்கள். இவ்வுலகம் ஒன்றுதான் மனித சஞ்சாரமுள்ளது. சூரியன் மனிதனுக்காகத்தான் காய்கிறது. மழை மனிதனுக்காகத்தான் பெய்கிறது. நக்ஷத்திரங்கள் நமக்காகத்தான் பிரகாசிக்கின்றன என்று நினைத்திருந்தார்கள். ஆனால் அப்போது காலிலியோ முதலிய ரஸாயன வித்வான்கள் பூமியே சூரியனைச் சுற்றுகிறதென்றும், பூமியும் மற்ற நக்ஷத்திரங்களினூடே ஒரு நக்ஷத்திரமென்றும், ஏனைய நக்ஷத்திரங்களிலும் உயிர்கள் வசிக்கலாமென்றும் கண்டு பிடித்தார்கள். அப்படியானால் மனிதன் பிரபஞ்சத்திற்கு அதிக முக்கியமானவல்லன். எத்தனையோ ஜீவராசிகளில் மனிதனும் ஒருவன். அவனுக்கு அஹம்பாவமெதற்கு என்று ஜனங்கள் பேசிக்கொள்ளவாரம்பித்தார்கள். மேலும் வேத புத்தகங்களில் கூறியவை அனேகம் ரஸாயன சாஸ்திரத்திற்கு விரோதமாக இருந்தன. ரஸாயன சாஸ்திரந்தான் நிச்சயம் என்றும் ருஜூப்பட்டது. அதன் பின் வேத புத்தகத்தில் கூறியவை யாவும் உண்மையென்ற கொள்கையை விடவேண்டிவந்தது. உண்மையை அனுபவத்தில்தான் கண்டுபிடிக்க வேண்டும். புத்தகத்தில் கூறியதை மாத்திரம் சத்தியமென்று நம்பலாகாது. ரஸாயன முறையில் கண்டுபிடிப்பதே உண்மை. ஏனெனில் அதையே ருஜூப்படுத்த முடியும்.

அனுபவத்தால் அறிவதெனில், புத்தியே முக்கியமாய் இருத்தல்வேண்டும். புத்தியைக் கொண்டு கண்டுபிடிப்பதுதான் நம்பத்தக்கது. வேதவாக்கியம் புத்தியினால் சரியென்று நிர்மாணிக்கப்படும் வரையில் நம்பத்தக்கதல்ல

---

உண்மையாக உயர்ந்தவன் ஒருவன் உலகத்தில் உதித்தால்—அவனை அறிந்துகொள்வதற்குரிய அடையாளம் யாதெனில்-அவனுக்கு விரோதமாக அறிவிலிகள் அனைவரும் கூடிக்கொள்ளுவர் என்பதே.

நாம் கருதப்போகும் தத்துவ சாஸ்திரிகளில் முதலானவர் டேகார்ட் என்பவர் (Descartes). அவர் தமது ஆராய்ச்சியை ஒரு நூதன முறையில் கொண்டுபோனார். அவர் கல்வி முடிந்தவுடன் ஞானத்தைப் பற்றி யோசிக்கலானார். உண்மை ஞானமுண்டா? அதை மனிதர் அடைய முடியுமா? சகல கலைகளையும் கற்பது ஞானமாகுமா? ஆனால் சகல கலைகளைக் கற்றபின், இன்னும் கல்லாதது உலகளவு இருக்கிறதே என்று தோன்றுகிறது. அன்னிய தேசங்களில் பிரயாணஞ் செய்வது ஞானமா? ஆனால் அன்னிய தேசங்களில் பிரயாணஞ் செய்துகொண்டே யிருப்பவன் தன் தேசத்தை மறந்துவிடுகிறான். முற்காலத்தில் என்ன நடந்ததென்று தேச சரித்திரத்திரங்களைப் படிப்பவன் தன்னுடைய காலத்தை யறிவதில்லை. இம்மாதிரி எந்தக் கல்வித் துறையும் நமக்கு ஞானத்தைத் தருவதில்லை. ஞானம் நம் மனத்திலிருந்தே உண்டாக வேண்டும். தன்னையே யறிந்தவன்தான் ஞானி. ஆகையால் தன்னையே ஆராய்ந்து ஞானத்தை யடையவேண்டு மென்ற எண்ணம் டேகார்டு மனத்தில் தோன்றிற்று.

அவர் பின்வருமாறு யோசித்தார். சிறு வயதிலிருந்து எத்தனையோ விஷயங்கள் நாம் பெற்றோரிடத்திருந்தும் உபாத்தியாயரிடமிருந்தும் மற்று முள்ளவரிட மிருந்தும் கற்றுக்கொள்ளுகிறோம். இவைகளில் சில உண்மை, சில கட்டுக் கதை, சில அவர் அவர்களுடைய சொந்த அபிப்பிராயங்கள்—இப்படிப் பல விதமாக விருக்கின்றன. இவைகளெல்லாம் நம்பத்தக்கவையல்ல. ஆகையால் உலகத்திலுள்ள வஸ்துக்கள் இதுவரைக்கும் கற்றவைகள் எல்லாவற்றையும் மறந்து, ஒவ்வொன்றாய் மனத்தால் மாத்திரம் பரிசோதித்துச் சரியா தப்பா என்று பார்க்கவேண்டும். அதாவது கற்றதெல்லாம் விட்டுப் புதிதாகக் கற்றுக்கொள்ளப் பிரயத்தனப்பட்டார் டேகார்டு. மூன்று முக்கிய விதிகளை ஏற்படுத்திக் கொண்டார். (1) மனத்தில் நிச்சயமாய் தோன்றாத விஷய மொன்றையும் உண்மை யெனக் கொள்ளக்கூடாது. அதாவது பிறர் சொல்வதாலோ, என்னுடைய சொந்த அபிப்பிராயத்தாலோ ஒரு விஷயத்தையும் சந்தேகமற்றது என்று சொல்லுதல் கூடாது. (2) ஒவ்வொரு துணுக்கையும் பல்வேறு பாகங்களாய்ப் பிரித்து ஒவ்வொரு துண்டையும் தனியாகப் பரிசோதித்து மனத்தைக் கொண்டு உண்மை பொய் என்று அறியவேண்டும். (3) என்னுடைய ஆராய்ச்சிகளை படிப்படியாக ஒழுங்குபடுத்தவேண்டும். முதலில் சுலபமானவையும் தெளிவான உண்மையெனத் தோன்றுபவைகளையும் அஸ்திவாரமாகப் போட்டு அவைகளின் மேல் அவைகளை ஆதாரமாகவுடைய மற்ற விஷயங்களை ஸ்தாபித்து ஞான இல்லமொன்று கட்ட வேண்டும்.

இப்போது, முக்கியமாய் இரண்டு கருவிகள் மனத்திற்கு உண்டு. ஒன்று சில விஷயங்களைப் பார்க்குமளவிலேயே உண்மையென அறிதல். இவைகளைச் சந்தேஹிக்க முடியாது. இப்படிப்பட்டவை உண்மையாய்த்தான் இருக்கவேண்டும். இரண்டாவது இப்படி நிச்சயமெனத் தெரிந்தவைகளினின்றும் ஊகித்து அறியும் சக்தி மனத்திற்கு உண்டு. ஒன்று ஸ்வய ஞானம் (Intution) இன்னொன்று ஊகித்தல் (Deduction). டேகார்டு எப்படித்

---

ஒழுக்கத்திற்கு ஊறு உண்டாகாமல் அளவுகடந்து அநுபவிக்கக்கூடிய புலனுகர்ச்சி இசை ஒன்றே.

தன் ஆராய்ச்சியை நடத்தினரென்பதைக் கவனிப்போம். "நாம் சாதாரண மாகப் புலன்களால், உண்டாகும் விஷயங்களை நம்புகிறோம். தூங்கும்போது காணும் கனவு நம்பத்தக்கதல்ல. அதில் காணும் மனிதரும் மற்ற காட்சிகளும் உண்மையல்ல வென்பதுபோல் ஏன் நாம் ஜாக்ரத ஸ்திதியில் காணும் பொருள்களும் பொய்யென நினைக்கக்கூடாது. நாமெல்லோரும் கடவுள் ஒரு வர் இருக்கிறார் என்று நம்புகிறோம். இவரே நம்மை ஏமாற்றுவதற்காகப் பொய்யான வஸ்துக்களை நிஜமாகக் காட்டிவரலாகாதா. இவ்வுலகம் மயன் இந்திரப் பிரஸ்தத்தில் பாண்டவர்களுக்கென்று நிர்மித்த அரண்மனையைப் போல் இருந்தாலோ? நம்முடைய புலன்கள் சில சமயங்களில் நம்மை ஏமாற்றிவிடுகின்றன. எப்பொழுதுமே ஏன் நம்மை இவை ஏமாற்றிவரலா காது? இது கடவுளின் லீலையாக ஏன் இருக்கக்கூடாது? ஆனல் கடவுள் நல்லவர் என்று நம்மால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அவர் உண்மையே வடிவ மாகக் கொண்டிருப்பவர். ஆகையால் கடவுள் நம்மை எமாற்றாமல் வேறு பூத மொன்று நம்மை ஏமாற்றலாகாதா? வானம், பூமி, மனித உருவங்கள், இயற் கைப் பொருள்கள் எல்லாம் தோற்றங்கள். நம்முடைய கைகள், கால்கள், சரீரம் முதலியன வெல்லாம் பொய்யே.

இதையே ஆதாரமாகக் கொண்டு யோசிப்போம். நம்முடைய தேகம் தோற்றம். நாம் நினைப்பதெல்லாம் பொய். பார்ப்பனவெல்லாம் பொய். புலன் களே பொய். எதுதான் நிஜம்? ஒன்றுமில்லை. ஒருகால் எல்லாம் பொய் யென்ற வாக்கியமொன்றுதான் நிஜமாக இருக்கலாம். இதுதவிர வேறொன் றும் உண்மையில்லையா? இப்படிப் பொய்யான வஸ்துக்களெல்லாம் உண்மை யான பொருள் ஒன்று இருந்தாலென்ன? கடவுளோ அல்லது வேறு சக்தியோ ஒன்று மனத்தில் உண்மையான எண்ணங்களைப் பதியவைக்கலாகாதா? கட வுள் வரையில் போவானேன்? எனக்கே எண்ணங்களைத் தோற்றிக்கொள்ள சக்தியுண்டு. அந்த நான் யார்? அதுவாவது உண்மையான வஸ்துவாக இருக்க லாகாதா?

ஆனல் புலன்களும் சரீரமும் பொய் யென்று மேலே சொல்லப்பட் டதே! இருப்பின் என்ன? நான் புலன்களும் சரீரமு மன்னியில் இருக்க முடியாதா? மற்ற வஸ்துக்கள் இல்லாவிடினும் நான் மாத்திரம் நிச்சயமாயிருக் கிறேன். ஏன்? நான் சிந்திக்கிறேன். சிந்திக்கும் பொருள் நிச்சயமாயிருக் கும் பொருள். ஆகையால் என்னைப் பற்றி நான் நினைக்கும்போ தெல்லாம் நான் நிச்சயமாய் இருக்கிறேன். இந்த சிந்திக்கும் என்னை சந்தேகிக்க முடி யாது. ஏன் சந்தேகிப்பதற்கு நான் இருக்கவேண்டும். என்னுடைய அமைப் பென்ன? சாதாரணமாக மனமும் சரீரமும் சேர்ந்ததாகவே நினைக்கிறேன். சரீரம் விஸ்தீர்ணமும், உருவமும் உள்ளது. ஸ்பரிச முதலிய சக்திகள் அதற் குண்டு. ஆனல் மனத்திற்கு இந்த குணாதிசயங்கள் இல்லை. ஒரு கெட்ட பூதம் நம்மை ஏமாற்றுவதாயிருந்தாலும் சரீர விஷயத்தில் மாத்திரம் ஏமாற்றமுண் டாகும், மனத்தின் சக்தி சிந்தை (Thought). நான் நினைக்கும்போது நான் இருந்தே தீரவேண்டும். நாம் நினைக்காதிருக்கும்போது இல்லை யென்று வைத்துக்கொள்ளலாம். ஆகையால் சிந்திக்கும் பொருள் மனம் என்றே,

---

பிறர் குற்றம் காண்பதும் தன் குற்றம் மறப்பதுமே மடமையின் விசேஷ லக்ஷணம்.

புத்தியென்றோ, சித் என்றோ சொல்லலாம். "நினைக்கிறேன் ஆகையால் இருக்கிறேன்" (Cogito ergo sum—I think, therfore I exist). இது வொன்றே உண்மை. இவ்விஷயத்தைப் போல் அவ்வளவு தெளிவாக விளங்கும் மற்ற விஷயங்களையும் உண்மையெனக் கொள்ளலாம்.

இப்போது நமது மனத்தில் அனேக எண்ணங்கள் உதிக்கின்றன. சில மனத்திலிருந்தே உண்டாகின்றன. சில வெளிப் பொருள்களினின்றும் நம் மனத்தை யடைகின்றன. ஆனால் இந்த வெளிப் பொருள்களெல்லாம் உண்மையென எவ்வாறு சொல்லலாம். சில விஷயங்கள் நமக்குச் சந்தேக மற்றச் வையாகத் தோன்றுகின்றன. ஆயினும் நம் மனத்திற்குத் தோன்றுவது போலவே பொருள்கள் வெளியிலிருக்கின்றனவென்பது என்ன நிச்சயம்? டேகார்ட் இவ்விஷயத்தைக் காரண காரிய வாதத்தால் நிரூபிக்கிறார். காரணம் நிச்சயமாய் இருந்தால் காரியமும் நிச்சயமானதாக விருக்கும். இல்லாவிடில் காரியத்தில் ஒருபாகம் காரணமே யில்லாமல் உண்டானதாகும். ஒரு விஷயம் நம் மனத்தில் உதிக்ககூடாத அவ்வளவு விசித்திரமானதாவும் மிகப்பெரியதாகவும் தோன்றினால் எனக்கு வெளியில் அவ்விஷயத்திற்குக் காரணமிருக்கிறதென்று நிச்சயமாய்ச் சொல்லலாம், சாதாரணமாக எனக்குத் தோன்றும் எண்ணங்கள் என் மனதிலேயே உதிக்கக்கூடியன. ஆனால் கடவுளைப்பற்றிய எண்ணம் மாத்திரம் இப்படிப்பட்டதல்ல. சர்வ வல்லமை, சர்வ ஞானம் முதலிய மகத்தான குணங்களையுடைய ஒரு பரம்பொருள் என் அற்ப மனத்தில் உதித்திருக்குமா? இராது. ஆகவே கடவுள் ஒருவர் எனக்கு வெளியில் அவசியமிருக்கவேண்டும். இதேபோல் மற்றப் பொருள்களும் பல வெளியே இருக்கின்றன வென்று ஊஹிக்கலாம். கடவுளைப் பற்றிய எண்ணம் நான் பிறந்தபோது என் மனத்தில் அவர் பதியவைத்திருக்க வேண்டும். கடவுள் என நிரூபித்தவுடன் அவரும் நம்மை ஏமாற்றமாட்டார். வேறு பூதம் நம்மை ஏமாற்றவும் விடமாட்டார். ஆகையால் நம்மனத்தால் தெளிவாகச சிந்திக்கக் கூடிய விஷயங்களும் பொருள்களும் உண்மையாகவே இருத்தல் வேண்டும்.

வெளியில் இருக்கும் பொருள் மனத்தைப்போலல்ல. ஏனெனில் மனம் சூக்ஷ்மமானது. அது சிந்திக்கும் குணத்தை மாத்திரம் உள்ளது. வெளியில் இருக்கும் பொருள் ஜடப்பொருள். அதன் குணதிசயம் விஸ்தீர்ணம். இவ்விரண்டிற்கும் சம்பந்தம் ஏற்படுவது கஷ்டம். மனம் ஜடப் பொருளை யறியக் கடவுளுடைய சகாயம்வேண்டும். நம்மனத்தில் தோன்றும் விஷயங்கள் உண்மை யென்பதற்கு அத்தாக்ஷி, கடவுள் நம்மை ஏமாற்றுவதில்லை என்ற கொள்கை. ஆகையால் ஒவ்வொரு விஷயமும் உண்மையாயிருக்கக் கடவுள் அதன்மேல் உண்மை முத்திரை யொன்று போடவேண்டும். உண்மை நமக்கெப்படி விளங்கும்? எது நமக்குச் சந்தேகமறவும் தெளிவாகவும் தெரிகிறதோ அதுவே உண்மை. ஒவ்வொரு விஷயமும் தெளிவாகத் தோன்றும் வரையில் நம் அபிப்பிராயத்தை வெளியிடக் கூடாது. ஜடப் பொருள் அகண்டமானது. அதை எண்ணிறந்த துண்டுகளாக வகுக்கமுடியும். வெற்றிடமென்பதே கிடையாது. ஜடப் பொருள் அசைவற்றது.

இப்போது மனமும் ஜடமும் ஒன்றுக் கொன்று நேர்விரோதமாக விருந்தால் இவ்விரண்டும் ஒரு கூட்டில் வாழுவது எப்படி? கடவுளுடைய உதவி

---

பலவீனர் பாதையில் தடையாயிருந்த கல் பலமுடையார் பாதையில் படிக்கல்லாய் இருக்கும்.

வேண்டும் என்று சொன்னேம். ஆனல் சாதாரணமாக இவ்விரண்டும் ஓரிடத்தில் இருப்பது நமது தேகத்தில். சரீரம் ஜடப் பொருள். மனம் சூக்ஷமப் பொருள். மனம் எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டிருக்கின்றது. இம்மாதிரி யோசனைக்கு வெளியில் பொருள்கள் இருக்கவேண்டுமென்று அவசியமில்லை. ஆனல் மனம் சரீரத்தோடு ஆத்மாவின் மூலம் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜடப் பொருளாகிய தேகம் வெளி உலகத்தை ஸ்பரிசிப்பதால் ஏற்படும் யோசனைகளும் மனத்தில் உண்டாகின்றன. இவ்வெண்ணங்கள் சுத்த சிந்தனையைவிட ஒருபடி தாழ்வானவை. ஆகையால் டேகார்டுக்கு சுத்த சிந்தனையையே மனிதர் அனுசரிக்கவேண்டும் என்று தோன்றிற்று.

(தொடரும்)

---

# யார் உயர்ந்தவன் ?

வெள்ளைக்காரன்........................

பிராமணன்..............................

வைசியன்...............................

“சூத்திரன்”...........................



க்ஷத்திரிய வமிசம் பரசுராமனல் அழிக்கப்பட்டுவிட்டதாகப் புராணங் கூறுகிறது. “சூத்திரன்” என்றதில் “சற் சூத்திரன்” “அசற் சூத்திரன்”-ஆகிய இருவகையாரும் அடங்குவர். “தீண்டாதார்” என்போர் இந்நால்வரின் பாரந் தாங்க முடியாமல் பாதாளத்தில் ஆழ்ந்துவிட்டனர் !

# மேனாட்டு விழுச் செல்வம்

(போ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

1 மலரின் பல இதழ்கள் அரும்பில் ஒருங்கிருக்கும். விரிந்தவுடன் பிரிந்து விடும். அதுவே அதன் அழகு. அதுபோல் உலகிலுள்ள பல ஜாதியாரும் அன்பால் ஒன்றுறப் பிணிப்புண்டிருப்பினும் தங்கள் விசேஷ குணங்களை வேறு வேறாக விருத்தி செய்யும் பொழுதுதான் மனிதவர்க்க மலர் பூரணம் பெறுகின்றது. காட்வின் ஸ்மித்.

2 தாரணி வாழ்வின் தங்கச் சட்டம்—முக்கிய மல்லாதவைகளில் சுதந்தரம். முக்கியமானவைகளில் ஒற்றுமை. அனைத்திலும் அன்பு.

3 மனித வாழ்வின் புனிதபாகம் மறந்துபோன அருள் நிறைந்த சிறு செயல்களாகும். வோர்ட்ஸ்வொர்த்.

4 சர்க்கார் தயவு வேண்டுவது தவறு ஒன்றே. உண்மைக்கு அது வேண்டுவதில்லை. தாமஸ் ஜெவ்வர்ஸன்.

5 ஒன்றே உள்ளது. பல மாறி மறையும். விண்ணின் வெளிச்சம் என்றும் ஒளி தரும். மண்ணின் நிழல்கள் பறந்தோடிவிடும். ஷெல்லி.

6 இன்பவாழ்வு சுதந்தரத்தின் பயன். சுதந்தரம் பயமிலா நெஞ்சின் பயன். பெரிக்ளீஸ்.

7 இன்று உன்னால் கூடியமட்டும் நன்றாய்ச் செய். நாளை அதினிலும் நன்றாய்ச் செய்யும் ஆற்றல் பெறக்கூடும். நியூட்டன்.

8 அறமே ஆற்றல் என்று நம்புவோமாக. அந்த நம்பிக்கையுடன் நாம் அறிந்த கடமையை ஆற்றத் துணிவோமாக. ஆப்ரகாம் லிங்கன்.

9 அவனியிலுள்ள சமயங்களில் அறத்தாறு உய்ப்பதொன்றே உண்மைச் சமயம். ஸவனரோலா.

10 வெப்பம் தட்பம் இரண்டில் எது மிகுதியாய் விளையினும் ஏற்றுக் கொள்ளக் கூடியவனே பலவானிலும் பலவான். அதுபோல் உயர்வு வந்த பொழுது கர்வமின்றியும் தாழ்வு வந்தபொழுது தளர்ச்சியின்றியும் உள்ளவனே உத்தமரில் உத்தமனாவான். புளூட்டார்க்.

11 காரியம் பெரிதோ சிறிதோ தம்மால் செய்யக்கூடியதில் சலிப்பின்றி உழைத்தலே சான்றோர் குணம். கதே.

---

இயற்கை நமக்கு வேலையை ஒரு அவசிய காரியமாகச் செய்திருக்கின்றது. ஜனசமூகம் அதைக் கடமையாக்கிவிடுகின்றது. வழக்கம் அதை இன்பமாகச் செய்ய இயலும்.

12 தனக்கென உழையாதான் துன்புறுவான். பிறர்க்கென உழைப்பதெல்லாம் பிறரும் தன் இன்பத்தில் கலந்து கொள்வதற்காகவே. கதே.

13 பிறர்க்கு நன்மை செய்பவன் தனக்கும் நன்மை தேடிக்கொள்ளுகின்ருன். ஸெனிக்கா.

14 நீதியாய் வாழ்பவனே நீடு வாழ்பவன். தீயவழியில் செலவு செய்த காலம் தாழ்ந்ததன்று—இழந்ததே யாகும். புல்லர்.

15 உலக அரங்கில் இவராகத்தான் நடிப்பேம் என்று கூற இயலாது. கொடுத்த வேலையைத் திறம்படச் செய்து முடிப்பதே நமது கடன். எபிக்டெட்டஸ்.

16 உண்மை ஞானம் கண்முன் இருப்பதைக் காண்பதன்று. பின் வருவதை முன் அறிவதாகும். டெரன்ஸ்.

17 நூலறிவு அதிகம் கற்றுவிட்டதாக அகத்தில் கர்வம் கொள்ளும். மெய்ஞ்ஞானம் இன்னும் அறியவேண்டியது அதிகமென்று தாழ்ச்சி சொலும். கௌப்பர்.

18 கண்ணிய புருஷனைக் கணித்து அறியப் பல சோதனைகள் உள. அவைகளில் ஒருபொழுதும் தவருத சோதனை ஒன்று உண்டு. அது தனககுக் கீழ்ப்பட்டவர்களிடம் தன் சகதியை எவ்விதம் உபயோகிக்கின்ருன் என்பதே. ஸ்மைல்ஸ்.

19 நம் இருதயத்தில் ஒரு கடவுள் உண்டு. மனச்சான்றே அது. மினண்டர்.

20 சிறுவர்க்கான பிரதமக் கல்வி அறிவு ஊட்டுவதன்று. நல்ல வழக்கங்கள் அமைப்பதே யாகும். போனல்டு.

21 வீடு செல் நெறி துறவறமன்று. அனவரதமும் அறச்செயல் ஆற்றுவதே யாகும். ஸ்வீடன்பெர்க்.

22 அறவாழ்வில் ஆசையுள்ளவன் சத்தியத்தைச் சார்ந்து நிற்க, அவனுக்குத் துக்கம் தொலைவது அப்பொழுதுதான். அதற்கு முன்னரன்று. ப்ளேட்டோ.

23 கடைப்பட்ட இழிதொழில் செய்ய அஞ்சுதல் வீரம். அது நமக்குச் செய்யப்படின் அதைப் பொறுத்துக்கொள்ளுதலும் வீரமே. பென் ஜான்ஸன்.

24 துன்பத்தை நன்கு பொறுக்கக் கூடியவனே எதையும் நன்கு இயற்றக் கூடும். மில்டன்.

25 போராட்டத்தின் கடைசி முடிவு யாதென்று வினவினல் வெற்றி என்று விடையிறுப்பேன். இப்பொழுது யாது விளையும் என்று கேட்டால் மரணம் என்று மறுமொழி தருவேன். ஸவனரோலா.

26 செல்வத்திலோ களியாட்டிலோ புகழிலோ பற்றுடையவன் எவனும் ஜனங்களிடைப் பற்றுடையவன் ஆகான். எபிக்டெட்டஸ்.

27 உலகத்தில் மக்களிடம் அன்பு பூண்பவனே உண்மையில் வாழ்பவன் ஆவான். அந்தோனி.

28 தேவைகள் குறையும் அளவுக்கே தெய்வத்தன்மை அடைவோம். ஸாக்கிரட்டீஸ்.

---

இதைக் கூறியது யார் என்று தேடற்க—கூறியதைமட்டுமே ஆராய்க.

29 சந்தேகம் தங்குமிடம் தவறுள்ள நெஞ்சு. திருடன் ஒவ்வொரு புதரிலும் ஒரு போலீஸ்காரன் என்று அஞ்சுவான். ஷேக்ஸ்பீயர்.

30 மனிதர் மணக்குமுன் வசந்த காலம். மணந்தபின் மழை காலம். ஷேக்ஸ்பீயர்.

31 ஞானிகள் இழந்ததற்கு அழுதுகொண்டிரார். சங்கடத்தைத் தவிர்க்க சந்தோஷத்தோடு வழிதேடுவர். ஷேக்ஸ்பீயர்.

32 ஒன்றும் செய்யாது காத்திருப்பவரும் ஊழியம் செய்பவரே. மில்டன்.

33 ஒவ்வொருவனுக்கும் உன் செவியைச் சாய். ஆனால் சிலரிடமட்டுமே பேசு. ஒவ்வொருவனுடைய கண்டனத்தையும் ஏற்றுக்கொள். ஆனால் உன் முடிவை வெளியிடாதே. ஷேக்ஸ்பீயர்.

34 காதல் வாழ்வு என்னும் யாழைக் கையிலெடுத்து எல்லா நரம்புகளிலும் இசை எழச் செய்தது; தான் என்னும் நரம்பில் விரல் வைக்கவே அது நடுங்கி நழுவிவிட்டது. டெனிஸன்.

35 உபயோகமே ஒளி அளிக்கும். துலக்காவிடில் துருப்பிடிக்கும். முடிந்ததென்று சோம்புவது எவ்வளவு மூடத்தனம். சுவாசிப்பதே வாழ்வது போலும். டெனிஸன்

36 என் பாவங்கள் எல்லாவற்றையும் வெளிவிட்டுச் சொன்னேன். சொன்னவுடன் ஜபிக்க முடிந்தது. என் முழுமனதோடு ஜபித்தேன். இப்பொழுது நான் வந்த மார்க்கமே பச்சாத்தாபம். சார்ல்ஸ் ரீட்.

37 பச்சாத்தாபப் படுவோரிடம் காதோடு காதாய் சாத்தான் எப்பொழுதும் விரும்பிக் கூறுவது காலம் கடந்துவிட்டதென்பதே. சார்ல்ஸ் ரீட்.

38 அதர்மம் அணியும் ஆடை ஐஸ்வரியம்; தர்மம் தரிப்பது தரித்திரம். தியோக்னீஸ்.

39 எப்பொழுதும் சமர்க்களத்தில் அல்லது ஜெயக் கொண்டாட்டத்தில் இருப்பவன் சத்தியத்திலேயே கண்ணும் கருத்துமாய் இருத்தல் துர்லபம். கௌலி.

40 ஒருவன் தன் சுதந்தரத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்குரிய ஓரே வழி எப்பொழுதும் மனம் வருந்தாமல் இறக்கத் தயாராய் இருப்பதே. டயோஜினிஸ்.

41 எவனுக்கு இன்னல் இழைத்தாயோ அவனை நீ வெறுத்தல் மனித இயல்பு. டாஸிட்டஸ்.

42 தவறு செய்வதைத் தடுப்பன பல. ஆனால் தவறாது தடுப்பது கோழைத்தனமே. மார்க்ட்வைன்.

43 உனக்குத் தெரிந்தன எல்லாம் நன்றாய் அனுஷ்டிக்க முயல்க. அங்ஙனம் செய்தால் நீ அறிய விரும்பும் மறை பொருள்களை எல்லாம் சரியான காலத்தில் தெரிந்து கொள்வாய். ரெம்பிரான்ட்.

44 நமக்கு ஆனந்தம் அளிக்கக் காரணமாய் இருப்பதெதையும் மாயை என்று கூற நியாயமே கிடையாது. கதே.

---

உண்மையாகவே தைரியமுள்ள மனம் எது? தன் தைரியத்தைத் தானறியா மனமே.

45 நமக்கு ஆண்டவன் நா அளித்திருப்பது இன்சொல் இயம்புவதற்கே. ஹீன்.

46 செய்ய இயலாததில் சினங்கொள்வது ஏன்? செய்ய இயன்றதைச் செய்வோமாக ரொமைன் ரோலண்ட்.

47 நமது ஆன்மா எதனுல் ஆக்கப்பட்டுள்ளதோ அதனுலேயே பொது மக்கள் ஆன்மாவும் ஆக்கப்பட்டதாகும். அதனுல் அவர்களுடைய உடலும் புனிதமானதே. பெர்னூர்டுஷா.

48 நூல்களை முறையாகக் கற்றல் நன்மை தரும். ஆனுல் இன்பம் அளிப்பது முறையின்றிக் கற்றலே. செனிகா.

49 மூடர்முன் முற்றக் கற்றவனுகக் காட்டிக் கொள்ள விரும்புபவன் முற்றக் கற்றவர் முன் மூடனுய்க் காட்டிக் கொள்ளுகிறுன். குன்றிலியன்.

50 உலகில் இதுவரை ஒரு கிறிஸ்துவனே வாழ்ந்திருந்தான். அவன் சிலுவையில் மாண்டான். நீட்சே.



பிரமுகர்களைப் புகழ்வோர் தங்களுக்கு அவர்களோடு பழக்கம் உண்டு என்று காட்டிக் கொள்ளுவதற்காகவே அவ்விதம் செய்கின்றனர். அவர் துதிக்கு மதிப்போ நன்றியோ காரணமாய் இருப்பது அரிது.

# “ காற்றுள்ளபோதே தூற்றிக்கொள் ”



தகப்பனுர் ஒரு அருமையான காந்தி படத்தை வாங்கிக் கொண்டுவந்து சுவரில் உயரமான இடத்தில் அடிக்க முயற்சி செய்கிறுர். பண்டிகைக்குக் கோட்டுத்தைத்துக் கொடுக்கும்படி பையன் எவ்வளவு அழுதும் அவர் அசையவில்லே. இப்பொழுது நல்ல சந்தர்ப்பங் கிடைத்தது பையனுக்கு!

பையன் :—“ என்ன அப்பா எனக்குக் கோட்டு வாங்கித் தருவீர்களா—மாட்டீர்களா ?”



அறிவில்லாத சமயவாதிகள் சமயக் கொள்கைகளுக்காக சண்டையிடட்டும். ஆனுல் அறத்தாறு ஒழுகுபவன் ஒருநாளும் தவறியவனுகான்.

## தியாகராஜ
# கீர்த்தனமும் பாடகர்களும்

(இ. ச. சிவராமலிங்கம் பிள்ளை.)

தென்னிந்தியாவில் தியாகராஜருடைய திருநாமம் தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள் என்று சொல்லலாம். சங்கீத உலகம் அவரைப் பூரணமாக அறிந்திருக்கிறது. தென்னிந்தியாவில் சங்கீதத்திற்குச் சிறந்த ஜீவியமும், தெளிந்த ஞானமும், தீர்க்கமான உணர்ச்சியும் கொடுத்தவர் தியாகராஜர் ஒருவரே. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் சங்கீத வித்துவான்களுடைய பத்ததியைப் பெருக்கியும் புதுக்கியும் ஒரு உன்னத ஸ்தானத்தை ஸ்தாபித்து, எல்லாராலேயும் நன்கு மதிக்கப் பெற்றுப் பேருங்கீர்த்தியும் வாங்கியவரும் தியாகராஜரே; பதங்களும் வேறு சில அம்சங்களும் கடுமைப்பட்டும், பொருள் விளக்க மில்லாமலு மிருந்த சங்கீதக் கலையை மிகத் தெளிவாக்கி ராககலைக்கு பிரதானமும் உயர்வு முண்டாக்கியவரும் இவரே யாகுமென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. தென்னிந்திய சங்கீதம் நிலைநிற்கிற காலம் வரை இவருடைய பாவனத்திருநாமமும் இருந்தே தீரும்.

தியாகராஜர் தன் கீர்த்தனங்கள் முழுதும் தெலுங்கு பாஷையிலேயே எழுதியுள்ளார். அற்ப சொற்பந்தான் சமஸ்கிருதத்திலும் தமிழிலுமிருக்கிறது. என்றாலும், தெலுங்கிலேதான் அதற்கு முதன்மை கொடுத்துள்ளார். ஆயினும் தியாகராஜ கீர்த்தனங்களை இப்போதுள்ளவர்கள் அநுசரிப்பது அவற்றின் கான மாதுரியத்தை மட்டுமேயாகும். கானரச சுரத்தில் மதிமறந்த சங்கீதக் கலையாளர், அவருடைய கீர்த்தனங்களிலேயுள்ள வாக்குகளுடையவும் பதங்களுடையவும் அர்த்தம் அல்லது பொருள்களை உணரவோ, அந்தர் லீலையான ஆசயங்களை அறியவோ சிரமம் எடுத்துக் கொள்வதில்லை. சங்கீதமென்றால் தியாகராஜ கீர்த்தனங்களென்றும், தியாகராஜகீர்த்தனம் கானஞ் செய்யப்படாத சங்கீதகச்சேரி கச்சேரியல்ல வென்றும் அநேகர்கள் எண்ணியுள்ளார்கள். அதனால் கானவித்துவத்தை உபயோகப்படுத்தும் மிக எளியவனும் மகாவித்துவானும் ஒன்றுபோல் தியாகராஜ கீர்த்தனங்களையே படித்து அப்பியாசப்படுத்திக் கொள்கின்றனர். அவர்கள் பெரும்பாலும் அக்கீர்த்தனங்களின் கானரசங்களில் முழுகி அதில் மாத்திரம் மதிப்பு வைத்துக்கொண்டிருப்பதால் வாக்குகளையும் பதங்களையும் எப்படி உச்சரித்தாலும் விரோதமில்லை யென்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது. "ராமநீஸமான மெவரு" என்ற பதமும் வாக்கும் 'ரமணீஸமான' என்று சாதாரணமாய் வழக்கிற்கு வந்துவிட்

---

"நேரில் குணங்களைப் பேசுவதில்லை; புறத்தில் குற்றங்களைக் கூறுவதில்லை"—இந்த வழியை அநுஷ்டித்தால் அவதூறும் முகஸ்துதியும் ஒருங்கே உலகினின்றும் ஒழியும்.

டன. "ஸுஜன ஜீவன—சுகுணபூஷண" என்ற வாக்குகள் ஸுஜன ஜீவனம் என்று ஆய்விட்டன. பகவந்நாம உச்சாரணங்களும் அக்ஷரங்களும் பிழையாக உச்சரித்தாலும் நல்ல பலத்தையே கொடுக்குமென்று மகாபாரதம் கூறுகின்றது. தியாகராஜ கீர்த்தனங்களும் பரமனுடைய நாமத்தை தோத்திரம் செய்வதேயாகும். அது பக்திரசத்தை யூட்டுவது; கன்மனப்போக்கர்களையும் சாந்தப்படுத்தும் சக்தி யுள்ளது. பாடுகிறவர்களும் பாடங்கேட்பவர்களும் இவ்வாறு கூறுகின்றனரேயன்றிச் சுத்தமாக வாக்குகளையும் உச்சரிக்க வேண்டுமென்று எண்ணுபவர்கள் அதிகமாயில்லை. அது சாரமில்லை என்பது சங்கீதக்காரர்களுடைய மதம் போலும்! வர்ணமெட்டுச் சரியாயிருக்க வேண்டும். அதை ஒப்பித்துச் சில அக்ஷரங்களை அதன் போக்குப்போல நீட்டியும், குறுக்கியும் இடைக்கிடையே சுரங்கள் கலக்கியும், முகம் வக்கிரித்தும், விவஸ்த தொனிகளை எழுப்பியும் தாளக்கணக்கிற்குத் தவறாமல் ஒப்புவித்தால் போதுமென்பது பழக்கமாய்ப் போய்விட்டது. கீர்த்தனங்களை இவ்வாறு அதன் அர்த்த புஷ்டியைக் கவனியாமல் பாடுகிறவர்களும் கேட்பவர்களும் அசிரத்தையாயிருந்து அதற்கு ஒரு மலினத்தை உண்டுபண்ணி விட்டார்கள்.

கிருதிகள் அதாவது கீர்த்தனங்களைப்பாடி ஒப்புவிக்கப் படிப்பது மட்டும் போதாது. அதிலுள்ள சாரபாவங்களை நல்லவண்ணம் உய்த்துணர்ந்து அவற்றிலும் ஈடுபட்டுக் கானஞ் செய்வதிலும் சிரத்தை யிருக்கவேண்டும். இது மிக மிக அவசியமாகும். சங்கீதம் என்ற பதங்கொண்டு விவசிதமாயிருக்கிற பாவ ராக தாளங்கள் ஒத்துவர வேணுமென்றால்—அக்கிருதி கர்த்தாவினுடைய உத்தேசங்கள் நிறைவேற வேணுமென்றால், நிச்சயமாய் அக்கீர்த்தனங்களைக் கையாளும் ஒவ்வொருவரும் கானராக தாளங்களில் கவனம் வைப்பது போல வாக்குகள் பதங்களிலும் கவனம் வைக்கவேண்டும்.

தியாகராஜ கீர்த்தனங்கள், நரஸ்துதி யாகவோ, பொருள் தேடுவதற்கோ எழுதப்பட்டவையல்ல. பள்ளியில் படித்துக்கொண்டிருந்த காலத்தில் வால்மீகி இராமயாணம் படிக்க நேர்ந்தது. அது முதல் ஸ்ரீராமபிரானிடத்து ஒரு நிச்சய பக்திப் பிரேமை ஏற்பட்டது. அந்தப்பக்தி ஏற்பட்டதும், பாடசாலையில் படிப்பதை விடுத்துச் சங்கீதத்தை அப்பியாசஞ் செய்யத் தொடங்கினர். தம்முடைய இஷ்ட தெய்வமான ஸ்ரீராமபிரானைக்குறித்து ஸ்துதி செய்யும் அவசியம் வந்தது. சாஸ்திர வாதத்தில் மனதைச் செலுத்தாமல், பகவத்தியானநிரந்தனராக அற்புதமான கீர்த்தனங்களை உண்டாக்கித் தாமே பாடிக்கொண்டு காலக்ஷேபம் செய்து கொண்டிருந்தார். பல சமயங்களில் அவருடைய பாடல்களில் அதாவது கீர்த்தனங்களில் ஸ்ரீகிருஷ்ண பகவானைப்பற்றிய கதைகளை வர்ணிக்கத் தொடங்கி முடிவில் ஸ்ரீராமபிரானது நாமத்தைக் கையாண்டு பாடி யிருப்பதும் காணலாம்.

தியாகராஜருடைய கிருதிகள் ஒவ்வொரு சந்தர்ப்பத்தை அனுசரித்து ரசிக்கத்தக்கவையாகும். சூரிய உதயம் முதல் மறுதினம் சூரிய உதயம் வரை ஒரு பகலும் இரவும் அநுசரிக்கப்பட வேண்டிய அநுஷ்டானங்களுக்கெல்லாம் கீர்த்தனங்களுண்டு. ஸ்ரீராம விக்ரகத்தை ஸ்நானம் செய்விக்கவும், வஸ்திராதி ஆபரணங்கள் அலங்காரம் செய்யவும், ஆகாராதி

---

முகஸ்துதி கள்ள நாணயம்: தற்பெருமை மட்டும் இல்லாதிருந்தால் அது செல்லுபடியாய் இராது.

கள் நைவேதனம் செய்யவும், பள்ளியறையில் உறங்கச் செய்யவும், திருப்பள்ளி எழுச்சி உணர்த்தவும் இன்னும் இவை போன்றவைகளுக்கு சந்தர்ப்பாநு சாரங்களான கீர்த்தனங்கள் பல செய்யப்பட்டிருக்கின்றன. மாணவர்களை அப்பியாசப்படுத்த வேண்டிய காலத்திலும் மற்றும் உண்டாக்கி முடிந்த பிரத்தியேக சம்பவங்களிலும் சில கிருதிகள் ரசிக்கப்படுவதற்குத் தக்க காரணங்களுமுண்டு. இங்ஙனம் தியாகராஜர் பல அபிப்பிராயங்களை யுடையவர்களையும் பல சந்தர்ப்ப சம்பவங்களையும் உள்ளடக்கி உண்டுபண்ணின கீர்த்தனங்கள் ஆயிரக்கணக்காக உள்ளன. இவற்றில் இப்போது புஸ்தகத்தில் 650 (அறுநூற்றைம்பது) கீர்த்தனங்களே வெளிவந் துள்ளன.

தியாகராஜர் தம்முடைய கிருதிகள் முழுவதையும் எல்லாச் சீடர்களையும் படிப்பித்திருப்பதாய் அறிவதற்கில்லை. அதிபுத்தி விவேகர்களும் சமர்த்தர்களுமான சீடர்களை மட்டும் சம்பாதிக்க வேண்டுமென்ற அவா தியாகராஜர்க்கில்லை. உலகிலுள்ள சகல மக்களும் புத்திசாமர்த்தியர்களல்லரென்றும், அவ் அறிவில்லாத ஜனங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வது இதர சாமானியர்களுடைய கடமையென்றும், ஆதலால் அவ்வேழை எளியவர்களை நல்லவண்ணம் படிப்பிக்க வேண்டியதுதான் லோகோபகாரமான பெரிய தருமமென்றும் தியாகராஜருக்கு நிச்சயமான ஓர் தெளிவு உண்டாயிருந்தது. உண்மையில் அதிபுத்திமான்களைச் சீடராக்கி கிருதிகளை படிப்பிக்க ஏற்பாடு செய்திருந்தால் அக்கிருதிகளுக்கு இப்போதுள்ள அபிவிருத்தி ஏற்பட்டிராது என்பது மட்டுமல்ல சில யோக்கியர்களிடம் சிக்கிக்கொண்டு நித்திய உபயோகத்திற்கு வராமல் சில காலத்திற்குள் இருந்த இடம் தெரியாமற் போவதற்கிடமாகவும் வந்திருக்கும்.

தியாகராஜரின் கீர்த்தனங்களின் ரசபாவங்களையும் தெய்விக சக்திகளையும் கண்டு அறிந்துணர்ந்த தஞ்சாவூர் சரபோஜி மகாராஜாவானவர் தம்மைப் பற்றிச் சில ஸ்துதிரூபமான கீர்த்தனங்களைச் செய்யுமாறு கட்டளையிட்டிருந்தனர். ஆனால் தியாகராஜர் இதில் இஷ்டமில்லாதிருந்ததால் உடன்படாதிருந்தனர். இறுதியில் பாடும்படி நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதன் பின்னர் ஒரு கிருதிபாடித் தூதனிடம் அனுப்பித்தார்.

"நிதிசாலா சுகமா—ராமுனிஸன்னுதி சாலா சுகமா"

(அல்லவா மனதே! நிதியோ சுகத்தைக் கொடுப்பது? அல்லது ராமநாம தோத்திரமோ சுகத்தைக் கொடுப்பது? நீ சத்தியமாய்ச் சொல்லு) என்ற பொருளடங்கிய பாட்டைப் படித்துணர்ந்த தஞ்சாவூர் ராஜாவானவர் லஜ்ஜையடைந்தனர்.

ஒரு சமயம் தம்முடைய மாணவர்கள் (சீடர்கள்) பக்கத்துக்கிராமத்தில் நடந்த ஒரு பாட்டுக்கச்சேரிக்குப் போயிருந்தனர். அங்கு கேட்ட சிங்காரரசமான ஒரு கீதத்தைப் படனம் செய்துகொண்டுவந்த ஒரு சீடன் தியாகராஜன் காதில் படுமாறு பாடினன். சிருங்காரமான கீதங்களைப் பாடுவதும் கேட்பதும் தியாகராஜருக்கு மிகவும் வெறுப்பாயிருக்கும். ஆதலால் தம்முடைய சாதனைகளுக்கு விருத்தமாய்ப் பிரவிர்த்தித்துள்ள சீடர்களைவிட்டு விலகிக்கொண்டு விடும்படி வறுப்புறுத்தினர். இதனால் சீடர்கள் திகைக்கலாயினர். சீடர்களில்

---

மனக்கிலேச முடையார்க்கு நம்பிக்கை யொன்றைத் தவிர வேறு மருந்து கிடையாது.

சிலரை விலகிக்கொள்ளும்படி கூறி மிகப் பிடிவாதஞ் செய்த தியாகராஜரை, அவருடைய மனைவியார் வேண்டியவாறு சமாதானஞ்செய்து, வெளியேறிய சீடர்களைத் திரும்பவும் வரவழைத்துச் சேர்த்துக் கொண்டதோடு அவர்களிடம் சாந்தமா யிருக்கும்படியும் தம் கணவருக்குத் தகுந்தமொழிகளாலுணர்த்தினர். தம்முடைய குரோத நிலையை உணர்ந்து பிடிவாத வைராக்கிய புத்திக்காக வருந்தினர். தாமே விசனித்துக் கொண்டனர். பொறுமை மனிதனுக்கு அவசியம் வேண்டற்பாலது என்பதைத் தம் மனைவியா லுணர்ந்ததற்கேற்ப ஒரு கீர்த்தனையும் செய்தனர்.

"சாந்தமூலேக சௌக்கியமூலேது—ஸாரஸதள நயன"
(தாமரக்கண்ணனே! சாந்தம் (பொறுமை) யில்லாவிட்டால் மனிதனுக்குச் சௌக்கியமில்லை) என்பதாகும்.

தியாகராஜ கிருதிகள் சங்கீதக் கலையிற் சிறந்து விளங்குவதுபோல, சாகித்தியத்திலும் சிறந்தனவென்பது சிலருடைய அபிப்பிராயம். அது சரியல்ல; சாகித்தியத்திற்கு எதாவது சொல்லத்தக்க ஸ்தான மிருப்பதாய்க் காணவில்லை யென்று பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். கீர்த்தனங்கள் பெரும்பாலும் சாதாரண சம்பாஷணைக்கு உபயோகிக்கிற நாடோடி பாஷையில்தான் காணப்படுகின்றன. இடைக்கிடையே பல்லவியிலாவது, அனுபல்லவியிலாவது கடினமான சம்ஸ்கிருத பதங்களும் காணலாம். சுசுக்க ரீதியிலுள்ள கானவாக்கியங்கள் ராகதாளத்திற் கநுசரித்துப் பாடப்பட்டவை யாகும். அநுப்பிராச முதலான சப்த அலங்காரங்களும், அர்த்தபுஷ்டி உண்டாக்கப் படுகிற அலங்காரங்களும் குறைவாக உள்ளன. பெரும்பாலும் கீர்த்தனங்கள் தெலுங்கிலேதான் என்பது சொல்லபட்ட-தெரியபட்ட விஷயம். சில கீர்த்தனங்கள் சம்ஸ்கிருதத்திலுமுண்டு. எல்லாக் கீர்த்தனங்களும் பக்திரசம் வழிந்தொழுகி ரசிக்கும்படி இருப்பதோடு எல்லாக் கீர்த்தனங்களிலும் தம்முடைய பேரும் முத்திரை யடியாக வைத்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

மற்றக் கீர்த்தனங்களைவிட தியாகராஜ கீர்த்தனங்களுக்கு யோக்கியதை அதிகப்படுவதற்குக் காரணம் அவற்றின் கானரசப் பிரதானந்தான் என்பதில் சந்தேகமில்லை. ஒரு ராகத்தினுடைய அதிசூக்ஷமஸ்தானங்கள் சம்பூர்ணமான சொரூபத்தைப் பிரகாசிக்கிற பல்லவியும், அதை அநுசரித்த இதர பாகங்களும், தியாகராஜருடைய கிருதியிலமைந்ததைப்போல் வேறு எதிலும் அமையவில்லை. எவ்வளவோ விஸ்தீரணப் படுத்தத்தக்க விதத்தில் ராகத்தைச் சுருங்கிய நிலையில் பிரயோகப்படுத்தி யிருப்பதால், கானசதுரன்மார்களுக்குத் தாளசுரபாகம் தவறாமல் இஷ்டம்போல் தீர்க்கப்படுத்திக்கொண்டு போவதற்கும் ராகத்தினுடைய சர்வ அங்கங்களிலும் சவிஸ்தாரமாய் பிரகாசிப்பதற்கும் சாத்தியமுள்ளதாக அமைந்துள்ளது. சாதாரண பாடிவராத ராகங்களில்-அபூர்வராகங்களிலும் சில கிருதிகளுள்ளவாறு காயகன்மார்களை உட்படுத்துவதுண்டு. தியாகராஜருடைய கீர்த்தனங்கள் பெரும்பாலும் பூர்வ மேளங்களிற்றான். சுருக்கமாகச் சில மட்டும் உத்தர மேளங்களிலும் உண்டு. ஆனல் அவற்றிற்குப் பூர்வ மேளங்களிலுள்ளவற்றிற் குள்ளதுபோல் பிரயோக சாதுரியமும் சௌகரியமும் குறைவேயாகும். சுபம்.

---

சாஸ்திரிகளைப்போல் சாமர்த்தியமாய் அஞ்ஞானம் பேசுவதிலும், சான்றோர்களைப்போல் சாமர்த்தியமின்றி ஞானம் பேசுதலே சாலச் சிறந்ததாகும்.

# கவிபாடும் திறம்.

(T. S. குழந்தைவேலன், திருவானைக்கா.)

கவி பாடுந்திறமே கல்வித்துறை அனைத்திலும் மேலானதென நன்கு மதிககப்பட்டுள்ளது. மனிதர் கவிஞரை ஒருவாறு சுவர்க்க லோக வாசிகளைப்போல் எண்ணிப் போற்றிப் புகழ்கிறார்கள். எந்த நாட்டிலும் பழைய காலக் கவிஞர்களே மேலானவர்களெனக் கொண்டாடப்படுகிறார்கள். இது தீராத ஒரு விந்தையே!

மற்றக் கல்வித் துறை அனைத்திலும் மனிதர் நாளடைவில் தேர்ச்சி பெற்றுவரக் கவிபாடுந் திறம் ஒரே முறையில் இருந்தாற்போலச் சிலருக்கு முதிர்வரமாக அமைந்ததாலோ, அல்லது நானா தேசத்தாரும் அவரவர், பழங் காவியத்தைப் புதிதாய்க் கண்டு அகமகிழ்வடைய, அவர்கள் பின்னோரும் யாவருமொப்ப அதன் அருமை பெருமையைக் கொண்டாடி வருவதாலோ, அல்லது எப்பொழுதும் வேறுபாடின்றி ஒன்றாயிருக்கிற உலக விநோதத்தையும், உள்ளத்தின் மாறுபாட்டையும் விவரிப்பதே செய்யுளிலக்கணத்தின் கருத்தாயிருக்கிறதால், பழங் கவிஞர்கள் முக்கியமாய்க் குறித்துக்கொள்ளத் தக்க பொருட்களைத் தப்பவிடாமல் கவிகளில் புனைந்துரைத்தும், நேரில் நிகழ்ந்த செய்திகளைப் புகுத்திக் கதை கட்டியும், புதிய கவிஞருக்கு முன் பாடிய சங்கதிகளைத் திருப்பிப் பாடவும், முன் உள்ள கற்பனைகளைப் புதிதாகப் புணர்த்தவும் வகையின்றி மூலகவி இயற்ற விஷய மொன்றும் விட்டிராததாலோ-யாது காரணத்தால் பழைய கவிஞருக்கு மேலான தன்மை அமைந்ததென்று அறியக்கூடவில்லை. எதுவானாலுஞ் சரி. பழங் கவிஞர்கள் நிகழ்ந்த செய்திகளையும் நேரிற் கண்ட பொருட்களையுங் கொண்டு கற்பனை நயஞ் சிறக்க, பொருள் செறிந்த மொழிகளைப் பொறுக்கி யெடுத்துப் பாடினர். புதிய கவிஞர் இல்லாத பொருட்களையும் சொல்லணி சிறக்கப் பாடுவர்.

இவ்வாறு கண்ணிய மிகுந்த கவிஞர் வகுப்பில் நானும் சேர விரும்பினேன். பழங் காவியங்கள் பல வாசித்தேனாயினும், உயர்பத வாஞ்சையானது பழைய செய்யுட்களைவிட்டு உலக இயற்கையையும், மனித இயற்கையையும் உற்று நினைந்து ஆய்ந்தறிய என் உள்ளம் ஆவல் கொண்டது. நான் கவிபாடக் குறித்த விஷயம் உலகம். அதைக் கேட்போர் மனிதர். நான் முன் கண்டிராததை விவரிக்க வல்லவனாவது முடியாத காரியம். மனிதர் விருப்பு வெறுப்பையும் சித்த விருத்தியையும் தெளிய உணர்ந்தாலன்றி, அவர்கள் உள்ளத்தில் உவப்புண்டாக்கவும், திகிலெழுப்பவும் ஆசைப்படுவது வீண்.

கவி வல்லோனாகும்படி பிரதிக்கினை செய்து, விஷய மனைத்தையும் புதிய அபிப்பிராயத்துடன் பார்த்தேன். என் கருத்தைக் கவரும் துறைகள்

---

மனிதனைக் கெட்ட வழிகளில் உபயோகித்துக்கொள்ளுவதில் முதன்மைபெற்றது, அவனைத் தூக்குமரத்தில் இடுவதே.

இருந்தாற்போல் விரிந்தன. எவ்வகை அறிவையும் அலட்சியமாய் விட்டுவிட வொண்ணுதெனத் தோன்றியது. மனோ சங்கற்பங்களையும் உவமானங்களை யும் நாடிக் காடேறி மலையேறித் திரிந்தேன். காட்டு மரமத்தனையும் மலர் வகையனைத்தும் என் மனதில் சித்தரித்தாற் போலப் பதிந்தன. எனக்குச் செங்குத்தான குன்றுக் குவடானாலுஞ் சரி—அரச மாட மாளிகைகளின் தூபி யானாலுஞ் சரி—இரண்டையும் உயர்வு தாழ்வு பாராமல் ஒன்றுபடுத்தி நிதான மாய்க் கவனித்தேன். சில வேளை சுற்றிச் சுழன்று செல்லும் சிற்றாற்றங் கரை வழியாய்ப் போய் அலைந்து திரிந்தேன். சில வேளை வேனிற் காலத்து மேக மாறுபாட்டை உன்னிப்பாய்ப் பார்த்தேன். கவிஞனுக்கு எதுவும் வீணாய்ப்போகாது.

சிறப்புள்ளது எதையும், திகிலுண்டாக்குவது எதையும் அவன் சிந்தை தெளிய அறிந்திருக்கவேண்டும். அச்சமுண்டாகும்படி பருத்தும், விசித்திர மாய்ச் சிறுத்து மிருக்கும் எல்லாப் பொருட்களையும் அவன் பழகித் தெரிந் திருக்கவேண்டும். உத்தியானத்திலுண்டாம் மூலவர்க்கம், வனத்தில் திரி யும் விலங்கினம், நிலத்தினுள் விளையும் தாதுவகை, விண்வீழ் கொள்ளி இவை முதலிய எண்ணித் தொலையாப் பொருள் விகற்பங்களின் அறிவை அவன் மனமெனும் பண்டசாலையில் சேமித்துவைத்திருக்க வேண்டும். நீதி சித்தாந்தத்தையும் மத சித்தாந்தத்தையும் வலியுறுத்திக் காட்டுதற்கும் அணிந் துரைப்பதற்கும் ஒவ்வொரு கருத்துப் பொருளும் பயன்படும். முதிர்ந்த அறி வுடையோருக்குத் தாமுணர்த்தும் விஷயத்தை அதன் உறுப்பு அனைத்தும் அணியாக விளங்குமாறு வருணிக்கவும், வாசிப்பவருக்கு தூரசம்பந்தமான குறிப்புகளைத் தோற்றுவித்து முன் நினைக்காத புதிய கல்விப் பொருளை யுண ர்த்தி இன்பம் விளைவிக்கவும் மிக்க நாவளம் வேண்டும்.

ஆதலால் உலகப் பொருள் யாவற்றையும் கருத்தாய் ஆராய்ந்தறிந்தேன். நான் போய்ப் பார்த்த ஒவ்வொரு நாட்டிலிருந்தும் கவிபாடுந் திறம் அமைவ தற்கு அனுகூலமான சாதனங்கள் சில அறிந்தேன்.

கவிவல்லோனுக்குரிய தொழில் பொருட்களைத் தனித்தனிப் பிரித் தல்ல, சாதி சாதியாய் வகுத்துணர்வது; எளியதையும் பெரியதையும் குறிப் பிடுவது; பூவாசம் பூவிதழில் உள்ள இரேகைகள் கவிராயன் நெஞ்சில் பதிந் திரா. மரச்சோலைப் பசுமையின் பற்பல வேறுபாட்டை அவன் விரித்துரைக் கிறதில்லை. உலகப் பொருளில் எளிதில் புலப்படும் முக்கிய குணங்குறிகளை அவன் சித்திரிக்கும் படத்தில் எத்திறமையோர்க்கும் தெளிய விளக்கவேண் டும்; நுணுக்கமாகப் பகுத்துணரும் நுட்பங்களை ஒருவன் கவனிப்பான், ஒரு வன் கவனியான்-கவிஞன் அவைகளைக் குறிப்பிக்கவேண்டுவதில்லை. தெரிந்த வர்கள், தெரியாதவர்கள் ஆகிய இருதிறத்தார்க்கும் தடையறப் புலப்படும் இலட்சணங்களைத் தப்பாமல் விளக்க வேண்டும்.

ஆயினும் இயற்கை யறிவு என்பது கவிஞனுக்குத் தெரிந்திருக்கவேண் டிய கல்வியில் ஒரு பாதியாகும். அவன் நானுவிதமான உயிர்பிழைத்தற் குரிய வழிகளையும் உணர்ந்திருக்க வேண்டும். அந்தந்த நிலைக்குரிய இன்ப துன்பங்களை அளவிடுவதும், காமக்குரோத முதலிய விகாரங்களின்

---

நண்பனுக்கு நன்மை செய்—அவனை இழவாதிருக்க. பகைவனுக்கு நன்மை செய்—அவனை நண்பனுக்க.

சக்தியை அவற்றின் புணர்ச்சிகள் யாவற்றிலும் கண்டறிவதும், ஊக்கம் வளரும் இளம்பருவந் தொடங்கி. ஊக்கந்தளரும் முதிர்பருவமளவும் குலாசார மதா சார ஏற்பாடுகளாலும், தேசாசார—சீதசோஷ்ண சீதசித்தியாய் விளையும் அநுகூல பிரதிகூலங்களாலும் மனதிற்குண்டாகும் விகாரங்களைத் தொடர்ந்து அறிவதும் கவிவாணர் தொழிலுக்கு இன்றியமையாததாம்.

கவிஞன் தன் தேசத்திலும் காலத்திலும் தலைப்படும் துரபிமானத்தைக் களைந்துவிட வேண்டும். பொருந்தும்—பொருந்தாத் தன்மைகளைக் கண்டு சிந்திக்கவேண்டும். தற்கால விதிகளையும் அபிப்பிராயங்களையும் கவனிக்காமல், எப்பொழுதும் மாறாதிருக்கும் நல்ல முடிவுகளை நினைக்கவேண்டும். அதனால் அவன் பெயர் பிரசித்தியாகாததை நினைத்து உள்ளஞ் சலிக்காமல் ஊக்கமே கொண்டு உழைத்திடவேண்டும். தன் காலத்திலுண்டாம் புகழைப் பெரிதெனப் பாராட்டக்கூடாது. தன் செய்யுளின் சுவையைப் பின்னோர் கண்டு இகழ்ந்தாலுஞ் சரி, புகழ்ந்தாலுஞ் சரி என்று சமசித்தமாயிருக்கவேண்டும். தன் செய்யுளைப் படிப்பவர்கள் அதன் அருமை பெருமைகளைக் கண்டு, 'இந்தக் கவிஞன் உலக விரிவுரையாளன்; மக்களுக்கு உறுதி காட்டுவோன்' என்று மனமொத்துக் கொண்டாடும்படி அவன் செய்யுள் இயற்றவேண்டும். காலம் இடம் எனும் இரண்டின் பற்றறுத்து உயர்ந்து, பின்னோர் மனப்போக்கையும், ஒழுக்க வழக்கங்களையும் செம்மைப்படுத்துபவன் நானே யென்று அவன் நினைத்துக் கொள்ளவேண்டும்.

கவிஞன தொழில் இம்மட்டில் ஒழிந்துபோகவில்லை. அவன் பல மொழிகளிலும் நூல்களிலும் பயின்றிருக்க வேண்டும். தன் கருத்துக்கேற்பப் பெருமிதமான மொழி நடை தனக்கு அமையும்படி அவன் இடையறாது எழுதி எழுதிப்பயின்று, அடுக்கடுக்கான அழகிய மொழித் தொடர்களையும், இன்சொற்புணர்ச்சி எழிலையும் வழக்கப்படுத்தியிருக்க வேண்டும். (இது ஜான்ஸன் பண்டிதர் வாக்கு.)



சண்டை தனக்குள் ஆரம்பிக்கும்பொழுதுதான் மனிதன் ஏதோ சிறிதேனும் மதிப்புடையவனாகின்றான்.




# பாரதப் பயன்.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

நம் நாட்டில் வழங்கும் புராணங்கள் இதிகாசங்கள் என்பனபோன்ற பல்வகைப் பாகுபாடுகளையுடைய நூல்களுள் இராமாயணமும் மகாபாரதமும் இதிகாச வகுப்பைச் சேர்ந்தனவாம். இவை சைவர் வைணவர் என்னும் பேதம் சிறிதுமின்றிப் பொதுவாக யாவராலும் கொண்டாடப் பட்டு வருவது யாவருமறிந்த விஷயமாம். இவற்றுள், இராமயணத்திலுள்ள சுந்தரகாண்டத்தை ஒருவர் கிரமப்படி அனுதினமும் பாராயணம் பண்ணுவாராயின் அவர் கோரிக்கைக ளெல்லாம் ஈடேறும் என்பர். இது முழுதும் பொய்யெனக் கூறற்குச் சிறிது மிடமில்லை. அவ்வாறு பாராயணம் செய்து அதனால் நற்பயனடைந்தோரே அனுபவ பூர்வமாக இவ் விஷயத்தைக் கூறக் கேட்டிருக்கிறோம். இதனை நம்பாதோர் பலரிருக்கலாம். அவர்கள் இது காகதாலீய நியாயத்தின்படி நிகழ்ந்திருக்கலாம் என்றேனும் ஒப்பியே தீர வேண்டும். (நன்றாகப் பழுத்து விழுந் தறுவாயி லிருந்த ஓர் பனம் பழத்தின்மேல் ஓர் காகம்வந் துட்கார்ந்ததும் அப்பழம் விழ, அக் காகம் உட்கார்ந்ததனால்தான் பனம்பழம் விழுந்தது எனக்கூறுதல் காகதாலீய நியாயம் எனப் படும்.) அவ்வாறே பாரதத்தில் விராட பருவம் வாசித்தால் மழைபெய்யும் என்னுமோர் நம்பிக்கையும் நம் கிராமவாசிகளுக்குண்டு. தங்கள் காலத்தில் அப்படிப் பெய்ததாக அநேக வயோதிகர் கூறுவதை நாளைக்கும் கேட்கலாம். எனவே இராமாயணமும் மகா பாரதமும் நம் நாட்டினரால் பொன்னேபோற் போற்றப்பட்டு வருகின்றன வென்பது வெள்ளிடை மலையாம். ஆனால் இராமாயண கதாநாயகனாகிய இராமபிரான் தெய்வமாகப் போற்றப்படுவது போல் மகாபாரத கதா நாயகர்கள் போற்றப்படுவதில்லை. எனினும், கதா நாயகியாகிய திரௌபதா தேவியைச் சிலர் பெண் தெய்வமாகக் கருதித் தொழுகின்றனர். ஆலயங்களுங்கட்டிப் பூசிக்கின்றனர்.

இவ்விரு நூல்களுள் மகாபாரதம் இராமாயணத்தினும் ஏற்றமாகக் கொள்ளப்பட்டு வருகின்றது. இது வேதத்திற்கு ஒப்பானதென்று மொழிப் பர். "நீடாழி யுலகத்து மறை நாலொடைந் தென்று நிலை நிற்கவே"—என

---

செல்வம் முதலியவற்றினாலே செருக்கடைந்து முன் நம்மோடு பயின்ற சிநேகிதரை மறக்கலாகாது. "தொன்மை மறவேல்" என்பது மனதில் பதியவேண்டும்.

வும், "மண்ணி லாரண நிகரென வியாதனுர் வகுத்த—எண்ணிலா நெடுங் காதை"—எனவும், "பாரத: பஞ்சமோ வேத:" எனவும் இதனை யான்ேரோர் புகழ்ந்து பேசியிருக்கின்றனர். வருடந்தோறும் விசேஷமாக கிராமங்களில் இப் பாரதக்கதை வாசிக்கப்பட்டு வருவது கண்கூடு. பாரதப் பிரசங்கத்தையே தொழிலாகக் கொண்டிருக்கும் புலவரும் நம் நாட்டில் பலருளர். ஒரு கிராமத் தில் பாரதம் படிக்கின்ருர்கள் என்பதைக் கேள்வியுற்றவுடன் சுற்று வட்ட கிராமங்களிலுள்ள ஆடவரும் பெண்டிரும் நூற்றுக்கணக்காய் அங்குக்கூடி விடுவர். பாரதக் கதை நாடகமாகவும் நடித்துக் காட்டப்படுகின்றது. கடைசி நாளில் தீ மிதிக்கும் விழா (நெருப்புத் திருவிழா) நடைபெறும். அப்பொழுது குறிப்பிட்ட சிலர் தீ மிதிப்பார்கள். இவ்வாறு பல கிராம வாசிகள் தங்கள் கிராமங்களில் எப்பாடு பட்டேனும் வருடந்தோறும் பாரதப் பிரசங்கம்—(இதை நெருப்புத் திருவிழா என்று வழங்குவார்கள்) நடத்தவேண்டிய முயற் சிகளை ஊக்கத்துடன் செய்வர்.

இதற்குக் காரணம் என்ன? இந்தக் கதையை யறியாதார் காணக்கிடை யார்; யாவர்க்கும் இந்தக் கதை தண்ணீர்ப்பாடமாகத் தெரியும். சிலர்க்குப் பிர சங்கியாரைவிட அதிகமாகவும் தெரியும் எனலாம். அங்ஙனமாக, தெரிந்த கதையையே மறுபடியும் மறுபடியும் கேட்பதேன் ?—காரணந்தான்தெரியாது. கதை கேட்கக் கேட்க—எத்தனை முறை கேட்டாலும் இன்பமாக விருக்கிறது என்ெருரு காரணம் காட்டப்படலாம். மற்ெருரு முக்கிய காரணத்தையும் கூறலாம். அதாவது ஊர் சுபிக்ஷமா யிருக்கும் என்பதே. முதலில் காட்டிய காரணத்தை விட்டிட்டு இரண்டாவது காரணத்தை எடுத்துக்கொள்வோம். "பாரதம் நடத்துவதால் ஊருக்கு க்ஷேம முண்டாகின்ற தென்பது மெய் தானு? அப்படி உமக்கு ஏதேனும் க்ஷேமம் உண்டாயிற்ரு?" எனக்கேட்டால், என்ன விடை கிடைக்கும்? "நன்மை யுண்டாகும் என்னும் எண்ணத்தோடு எம் முன்னேர் அனேககாலமாகத் தலைமுறை தலைமுறையாக இப்படிச் செய்து வந்தார்கள். நாங்களும் அவர்களைப் பின்பற்றிச் செய்து வருகிருேம்" என் னும் விடையே கிடைக்கும். இதனுல் பெறப்படுவதென்ன? நமது முன் னேர் பாரதக் கதையை ஒவ்வொரு ஊரிலும் வருடந்தோறும் நடத்திவருதல் வேண்டும். அப்படிச் செய்து வருதலால் அனேக நன்மைக ளுண்டாம் என் னும் எண்ணத்தை யாவர்க்கும் பரப்பியதோடு தாங்களும் அவ்வாறே செய்து வந்தனர். மற்ெறன்ருகிய இராமாயணம் இவ்வாறு யாண்டும் நடத்தப்படுவ தில்லை.

பாரதம் பதினெட்டுப் பருவங்களை யுடையது. முதல் பத்துப் பருவங்களி லும் பாண்டவ கௌரவர்களின் பிறப்பு வளர்ப்புக்களும், அவர்கள் விரோதங் கொள்ளுதலும், துரியோதனன் சகுனி முதலிய துஷ்டர்களின் சேர்க்கை யால் உத்தமர்களாகிய தன் சிற்றப்பன் பிள்ளைகளாகிய பாண்டவர்கள் மீது பொருமை கொண்டு சூதாடி வஞ்சனையால் அவர்கள் செல்வமனைத்தையும் கவர்ந்துகொண்டு அவர்கள் மனைவியான பாஞ்சால ராஜகுமாரியைப் பார் மன்னரவையில் மானபங்கப்படுத்தி அவர்கள் வனவாசம் பதின்மூன்ருண்டு

---

நம்மில் உயர்ந்தோரிடமும் எவ்வளவோ தீமை இருக்கின்றது. நம்மில் தாழ்ந்தோரிடமும் எவ்வளவோ நன்மை இருக்கின்றது. ஆகையால் பிற ரைப்பற்றிப் பேச நம்மில் எவர்க்கும் தகுதியுடைமை அரிது.

செய்துவரின் பாதிபபார் பகிர்ந்தளிப்பேன் எனப் பகர்ந்து காட்டிற்குத் துரத்தியதும், அவ்வாறே அவர்கள் வனவாச முடித்துவந்து கேட்டபோது சொன்ன சொல் தவறி அரசுகொடேனென்றதும், பின்னர் இருதிறத்தார்க்கும் போர் நிகழ்ந்ததும், அப்போரில் துரியோதனனுதியர் மாளப் பாண்டவர் வெற்றி மாலை சூடிப் பாரைக் கைப்பற்றியதும் கூறப்பட்டிருக்கின்றன. பின்னுள்ள எட்டுப் பருவங்களிலும் அனேக ராஜ தருமங்களும், நான்கு வகைப்பட்ட ஆஸ்ரமிகளின் ஒழுக்கங்களும், இல்லற வியல்பும், முத்தி நெறியும் இன்னோரன்ன பிறவும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் சாந்தி பருவம் மிகவும் சிறந்து விளங்குவதாகும் எனினும் பாரதக் கதையில் முதல் பத்துப் பருவங்களே முற்சொன்ன பிரசங்கங்களில் நடைபெறுகின்றன. பின்னுள்ள பத்துப் பருவங்களின் பெயர்களையேனும் அவர்கள் கேட்டிருப்பரோ வென்பதும் பெருஞ் சந்தேகமே. எங்ஙனமாயினும் அது முன்னோரால் நியமிக்கப்பட்டதுதானே. அவர்கள் முழுவதும் நடத்தவேண்டு மென்று வழி காட்டியிருந்தால் இவர்களும் செய்வார்கள். அவர்கள் அவ்வாறு கூறவில்லை; இவர்களும் அவ்வாறு நடத்துவதில்லை. இதில் பெரியோர் நோக்கமென்ன வென்பதே நாம் ஆராயவேண்டிய விஷயம். 'துச்சாதனன் திரௌபதையைத் துகிலுரிந்தான், பாண்டவர்கள் வனவாசத்தில் மெத்த கஷ்டப்பட்டார்கள், விராடபுரத்தில் கீசகன் திரௌபதையைப் படாதபாடு படுத்தினன், வீமன் பிரசண்டமாருதம்போல ஒரே யடியில் கீசகனைக் குத்திக் குமைத்துக் கொன்றுவிட்டான், அபிமன்யு அதிசயப் போர் புரிந்தான், கிருஷ்ணன் அர்ச்சுனனுக்குத் தேரோட்டினன், துரியோதனனைக் கதாயுதத்தைக் கொண்டு ஒரே அடியில் கீழே தள்ளிக்கொன்றான் வீமன் என்பன போன்ற கதைகளை வாசித்துவிடுவதனுலும் கேட்டு விடுவதனுலும் வரும்பய னென்ன? சோறு என்றொருவர் சொல்லக் கேட்டமாத்திரத்தில் பசியடங்கிவிடாது. வெறுங் கதைகளை அதிலும் பாரதம் போன்ற வெறுஞ் சண்டைக் கதைகளை—கேட்டவளவில் நன்மை நேர்ந்துவிடாது. அதிலும் ஊருக்குச் சுபிக்ஷம் உண்டாய் விடாது.

அங்ஙனமாயின், முன்னோர் இவ்வாறு ஏற்படுத்தியது பயனற்ற காரியமோ? அன்று அன்று. அவர்கள் அபிப்பிராயம்—நோக்கம்—இன்னதென்று அறிந்துகொள்ளாத குற்றம் நம்முடையதே. கல்வி யறிவற்ற பாமரர்களுக்குத் தான் தெரியாது; கற்றறிந்தவர்களாகிய பிரசங்கிகளும் இதனை யவர்களுக்கு அறிவுறுத்துகின்றனரில்லை. உண்மையைக் கூறிவிட்டால் மறு வருஷம் பிரசங்கம் நடவாதே, நமது வருவாயின் வாயில் மண்விழுந்து விடுமே என்னு மச்சம்போலும் அவர்களுக்கு.

எத்தனை யெத்தனை சனனத்தியற்றும் பாவம்
எத்தனையுண் டெனினுமொரு விருக்ஷத்துற்ற
மொய்த்த பல பறவையெலாங் கல்லொன்றாலே
மூகமாகி யகன்றோடு முறைமையேபோல்

---

தரையோடு தரையாய் நசுக்கப்பட்டாலும் சத்தியம் மறுபடியம் எழுந்து நிற்கவே செய்யும். ஆண்டவனுடைய அந்தமில்லா ஆண்டுகள் அதனுடையது மாகும்.

உத்தமமாம் பாரதங்கேட்டதனுல் தீரும்
உளத்திலெதைக் குறித்தாலும் பொருத்துவிக்கும்
சுத்த பவித்திரமாகு மணமுமெலாச்
சுகமுமவர்க் கலதொன்ருற் சொல்லொணுதே.

என்பன போன்ற பாடல்களைக் கூறி, இப்பாரதக் கதையை ஒரு முறை கேட்டவர்களும் எல்லாப் பாவங்களும் நீங்கப்பெறுவர்; புத்திரரில்லார் புதல்வர்ப் பெறுவர்; மணமில்லார் மணம் பெறுவர்; பணமில்லார் பணம் பெறுவர் என்று பதங்களை அடுக்கடுக்காய்க் கொட்டிப் பிரசங்கம் செய்வர். இதற்குத் திருஷ்டாந்தமாக ஓர் கதையும் கூறப்படுகிறது. அது இது.

ஜெனமேஜெய மன்னன் இக்கதையைக் கேட்டுவருங் காலத்தில் ஓர் கறுப்புத் துணியை ஓர் பெட்டியில் வைத்து மூடிவிட்டுக் கதை கேட்டு வந்தான். கதை முடிந்த பின் எடுத்துப் பார்த்தபோது அது கருகிறமாறி வெளுத்திருந்தது என்பதாம். இப்படி யெல்லாம் சொல்லிக் கேட்போரை மதியீனர்களாக்கிவருவது கற்ரோருக் கழகாகுமோ. இனி,

அப்பெரியோரின் நோக்கந்தானென்ன வெனப் பார்ப்போம். பாரதக் கதையில் பாண்டவர் கௌரவர் என இரண்டு கக்ஷியினர் காணப்படுகின்றனர். அவர்களுள் பாண்டவர்கள் மிகவும் பொறுமை தெய்வபக்தி கருணை முதலிய நற்குணங்கள் நிரம்பப் பெற்றவர்கள். இவர்களின் தாயாதி (பங்காளி) யாகிய துரியோதனன் இவர்களுக்கு நியாயமாகச் சேரவேண்டிய பாகத்தைக் கொடுக்க மனமின்றி அவர்களை யழித்துவிடின் அப்பாகத்தையும் தானே யனுபவிக்கலா மென்றெண்ணி, அவர்களைக் கொல்லப் பலவகைச் சூழ்ச்சிகளை யெல்லாம் செய்து பார்த்தான். அவர்களை வதைக்க முடியாமையால் சூதாட்டத்தினுல் நாடு முதலியவனைத்தையும் அபகரித்துக்கொண்டு காட்டிற்கனுப்பிவிட்டான். சில பெரியோர்கள் சொன்ன வார்த்தையை மறுத்தற் கஞ்சிப் பதின்மூன்ருண்டு கழித்து வந்தால் பாகத்தைக் கொடுத்து விடுவதாகச் சொன்னுன். ஆனுல் அப்படியே அவர்கள் திரும்பிவந்து கேட்டபொழுது தன் படைவலிமையைப் பெரிதாகக் கருதிச் சொன்னபடி கொடுக்க மறுத்துவிட்டான். பாண்டவர்களோ தெய்வ பலத்தையே பெரிதாகக் கருதி, 'சத்தியமே ஜெயம்' என்று க்ஷத்திரிய தருமத்தைக் கைவிடாமல், போர் புரிந்தேனும் அரசுபுரிவதென்று துணிந்து அமருக்காயத்தப்பட்டனர். இருபடைகளும் கைகலந்து பொருதன. போருக்கஞ்சிப் புறமிடாப் புரவலர் பலரைப் படைத்துணையாகப் பெற்றிருந்தும் துரியோதனன் தன் தம்பியரையும் புத்திரரையும் பந்துமித்திரர்களையும் நண்பரையும் இழந்து முடிவில் தானும் பரிதாபமாக அமர்க்களத்தி லடியுண்டு ஆவியிழந்தான். இதுதான் பாரதக் கதையின் சுருக்கம்.

---

நான் உண்மையைப்போல் கர்ண கடூரமாயிருப்பேன். நீதியைப்போல் நெறி பிறழாதிருப்பேன். எந்தக் காரியத்திலும் வேஷம் போடேன். உண்மையாகவே உழைப்பேன். இரண்டுபடப் பேசேன். சாக்குப் போக்குக் கூறேன். அணுவளவும் பின்வாங்கேன். அதனுல் நான் கூறுவதற்கு யாரும் செவிசாய்க்காமல் இருக்க முடியாது.

பொதுவாகப் பாரதத்தினின்றும் தெரிந்தெடுத்து அனுஷ்டிக்கப்பட வேண்டிய நீதிகளும் தத்துவங்களும் அளவிடற்கரியனவா யிருப்பினும் சிறப்பாக இப்பாரதக் கதையினால் அறியக்கிடக்கும் நீதியாவது: "ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களாயுள்ள பங்காளிகள், நிலம் வீடு முதலிய சொத்துக்களின் சம்பந்தமாக, ஒருவர் மீதொருவர் பகைமை பாராட்டி, ஒருவர் பாகத்தை யொருவர் அபகரிக்கக்கருதி மோசம் செய்ய நினைக்கலாகாது. பெரியோர்கள் முன்னிலையில் உள்ள சொத்துக்களைச் சமபாகமாகப் பங்கிட்டுக்கொண்டு மனவருத்தமின்றி ஒற்றுமையுடன் வாழ்தல் வேண்டும். யாவனொருவன் அதிக்கிரமமாக நடப்பினும், 'போகட்டும், அவன் பிரியப்படியே எடுத்துக் கொள்ளட்டும்; அன்னியனுக்கல்ல; என் சகோதரனுக்கே யல்லவா கொடுக்கிறேன்' என்று சிறிது விட்டுக் கொடுத்தேனும் சமாதானப் படமுயலுதல் அவசியம். அங்ஙனமின்றி, நியாயவரம்பு கடந்து பெரியோர் பேச்சையும் கேளாமல் துர்வாதத்தால் பகைமையைப் பொருட்படுத்தாது முழுவதையு மபகரிக்கக் கருதுவோர் அழிந்து படுவர். இதற்குத் துரியோதனனே சாட்சி. அநியாயம் எவ்வளவு பலமுள்ளதாகக் காணப்படினும் முடிவில் அழிந்துபடுவது அதுவே. தருமபுத்திரர் எவ்வளவு பொறுமையைக் கைக்கொண்டிருந்தார்! மனைவியைச் சபையிலிழுத்து வந்து அவளதாடையை யுரியச் செய்ததைவிட மேலான அவமானம் பிறிதொன்றிருக்க முடியாது. அத்தகைய அவமானத்தை விளைத்த காலத்தும் அவர் பொறுமையைக் கை விட்டாரில்லை. வனவாசம் செய்து வருமாறு துரோணர் முதலிய பெரியார் செய்த தீர்மானம் சரியோ அன்றோ, உடனே பொறுமையுடன் ஏற்றுக்கொண்டார். முடிவில் வெற்றி அவருடையதாகவே யிருந்து 'பொறுத்தவர் பூமி யாள்வார்' என்னு மொழியை நிலைநாட்டிற்று. உத்தமர்களுக்கே தெய்வ சகாயமு முளதாகும் என்னும் வாக்கியம் பொய்க்காதபடி கிருஷ்ணபகவான் துணையும் பாண்டவர் பக்கலே யிருந்தது" என்பனபோன்ற நீதிகள் நிலங்களைப் பங்கிட்டுக்கொள்ளும் விஷயமாகப் பெரு வழக்கிட்டு நிற்கும் கிராம வாசிகளுக்கு எத்துணையறிவை யூட்டி ஒற்றுமையுண்டாதற் கேதுவாகுமென்பதை எண்ணிப் பார்க்குமிடத்து, இக் கதையை வருடந்தோறும் கிராமங்களில் நடத்தவேண்டுமென்று பெரியோர் ஏற்பாடு செய்தது எவ்வளவு அறிவுடைமையென்பது விளங்காமற்போகாது. பகைவரிழைக்கு மின்னல் எத்துணைத் துன்பம் பயப்பதாயினும் அதன்பொருட்டு நீதிநெறி மாறாமலும் பொறுமையுடனுமிருந்து கடவுளை நம்பிக் கடைப்பிடிப்போர் தேவருக்கொப்பாவர், யாவராலும் போற்றவும் படுவர் என்னுங் கருத்தைப் பாண்டவர்களை வணங்க வேண்டுமெனத் தெய்வ சம்பந்தத்தையு முட்புகுத்தியிருப்பது இன்னும் எவ்வளவு அறிவுடைமை என்பது ஆராய்ந்தறியத்தக்கதாகும். பாரதக் கதையின் இப் பரம தாற்பரியத்தைச் செவ்வனே யறிந்து கடைப்பிடித்து எல்லாக் குடும்பங்களும் சண்டை சச்சரவின்றிச் சமாதானமாக ஒற்றுமையுடன் வாழுமேல் அக்குடும்பங்களும் அக் குடும்பங்களையுடைய ஊரும் செழித்துச் சுபிக்ஷமாக விளங்குமென்பதில் சந்தேகமென்ன? பெரியோர்களின் இந்நோக்கத்தை யறிந்துகொள்ளாமல் எத்துணை முறை கேட்கப்படினும் பாரதம் எட்டுணைப் பயனையுந் தராதென்பது மறுப்பாருண்டோ? இருபது ரூபாயும் பெறாத கால்

---

நம் குற்றங் குறைகளை எடுத்துரைத்து அவைகளை நீக்கி நடக்கும் நெறியை நமக்குப் போதிக்கின்றவர்களே நமக்கு உத்தம நண்பர்கள்.

வக்கர் நிலத்தின்பொருட்டு ஒவ்வொரு கக்ஷியினரும்—இவர்கள் யார்? அன்னியரல்லர்—ஒரு தாயக்கட்டில் பிறந்த சகோதரரே-சிற்றப்பன் பெரியப்பன் பிள்ளைகளே - ஓர் குடும்பத்தினரே - இரண்டாயிரம் ரூபாய் செலவு செய்து நியாய ஸ்தலங்களில் அலைந்து திரிந்துகொண்டிருப்பது பிரத்தியக்ஷமாகக் காணக்கூடியதல்லவா! வரப்பைச் சிறிது தள்ளிப்போட்டுக் கொண்டதற்காகத் தொண்டைகிழியச் சண்டையிட்டு மண்டையுடைந்து மாண்டோர் பலராவரே! சுருங்கக் கூறின் ஒவ்வொரு குடும்பத்திலும் சிறு பாரதப்போர் நடைபெறுகின்றதென்பது மறக்கமுடியாத வுண்மையாமே. குடும்ப க்ஷேமம் எங்கே? ஊர்ச்செழிப்பெங்கே! வருடந் தவறாது பாரதப் பிரசங்கம் நடைபெறச் செய்தும் பயனென்ன! முன்னோரின் நன்னோக்கத்தை யறிந்து அதன்படி யொழுகாமையே யன்றோ காரணம்! இவ்வுண்மையைக் கடைப்பிடித்தொழுகுவராயின் ஓர் வழக்கேனும் வந்திடுமோ! 'பங்காளியையும் பனங்காயையும் பதம் பார்த்து வெட்டவேண்டும்' என்னும் பழமொழிதானும் பாரிடைப் பரவுமோ!

வில்லி பாரதமென வழங்கும் பாரதத்தை அதன் ஆசிரியராகிய வில்லிபுத்தூராழ்வார் பாடியதற்கு ஓர் காரணம் உரைக்கப்படுகின்றது. அது யாதெனில்,

கல்வியிற் சிறந்து விளங்கிய வில்லிபுத்தூராழ்வாருக்கும் அவர் சகோதரருக்கும் தாயபாக விஷயமாகச் சிறிது சச்சரவு நேர்ந்தமையின், இவர், அரசனிடம் சென்று வழக்கைத் தீர்த்துத் தருமாறு வேண்டினர். அவ்வரசன் நீர் புலவராயிருக்கின்றமையின் வடமொழியிலுள்ள மகாபாரத கதையைத் தமிழில் பாடிக் கொணர்வீராயின் உமது வழக்கைத் தீர்ப்பேன் எனக் கூற, வில்லிபுத்தூரார் அங்ஙனமே தொடங்கிப் பாடிவருங் காலத்தில், தாயபாகம் காரணமாகவே பாரதப்போர் நிகழ்ந்ததென்னும் உண்மையை யறிந்து தம் தாயபாகத்தைத் தம்பிக்கே கொடுத்துவிட்டனர் என்று ஓர் கதை வழங்குகின்றது.

ஆகவே, தாய பாகம் காரணமாக ஓர் குடும்பத்தைச் சேர்ந்தோர் பகைமை கொள்ளாமல், ஏற்றத் தாழ்வுகள் காணப்படினும் பொறுமையாயேற்றுக்கொண்டு வாழ்தலே அக் குடும்பத்திற்கு நன்மை பயக்கும் என்பதையுணர்ந்து, ஒவ்வொருவரும் அந்நெறியில் நிற்க முயல்வதே பாரதக் கதையாலுண்டாகும் முக்கிய பயனாகும். பாரதப் பிரசங்கிகளும், தன்னயங்கருதாது இவ் வுண்மையை யாவர் மனத்திலு முறுத்தும்படி யெடுத்துக்கூறி எங்கும் ஒற்றுமை யுண்டாக்க முயல்வார்களாக. இதனை வாசிக்கும் நண்பர்களே! இவ்விஷயம் விரிவஞ்சி சுருங்கக் கூறப்பட் டிருப்பினும் இத னுட்கருத்தை நன்குணர்ந்து யாவர்க்கு மெடுத்துரைத்துக் குடும்ப வொற்றுமை யுண்டாக்குவது உங்கள் கடமையாகும். இது பெரும் தேசத் தொண்டே யாகும் என்பதை யாரும் மறுக்கார்.

"ஒன்றுபட்டா லுண்டு வாழ்வு"

---

இன்பப்பேற்றின் இரகசியம்-நமக்கு ஏற்றபடி வெளி விஷயங்களை அமைக்கச் சிரமப்படுவதினும், வெளி விஷயங்களுக்கு ஏற்றபடி நாம் நடந்து கொள்ளுவதேயாகும்.

# எதன் பொருட்டு இரங்குவதோ?

(ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை)

"ராஜம்! எப்பொழுது பார்த்தாலும் இப்படி வீட்டு வேலைகளிலே தலையிடாமே என்னென்னவோ செய்துண்டிருக்கிறாயே! தள்ளாத காலத்திலே எனக்கு எந்தக் கவலையும் இல்லாதபடி, குடும்பப் பொறுப்பையெல்லாம் ஏத்துண்டு ஒழுங்கா நடந்துண்டு எல்லோருக்கும் சந்தோஷம் உண்டாக்குவாய் என்று எண்ணித்தானே, உன்னை எவ்வளவோ பாடுபட்டு இங்கு கொண்டுவந்து சேர்த்தேன்! இதுவரைக்கும் குடும்பக்கவலையே பெருங்கவலையாகி உழைப்பதிலும் தின்பதிலுமே காலத்தை வெட்டியா கழித்துண்டிருந்தது போக, இனியாவது 'ராமா கிருஷ்ணா கோவிந்தா' என்று பகவந் நாமங்களைச் சொல்லிண்டிருந்து இருக்கிற போதை நல்ல போதாப் போக்கக் கூட முடியாதபடி என் தலையில் பிரமா எழுதியனுப்பனுமா? எத்தன நாளைக்கித்தான் இப்படி நானே ஒண்டிக் கட்டையா கஷ்டப்பட்டுண்டு இருப்பது? நானும் எத்தனையோ தடவை சொல்லிச் சொல்லி பாத்தாயிட்டுது; உன் மனம் என்னைக்கித்தான் இரங்குமோ தெரியலே! படிச்ச பெண்ணுச்சே குடித்தனம் பண்ற முறையெல்லாம் நன்னாச் செய்யத் தெரிஞ்சுண்டிருப்பாய் என்று உன்னை மாட்டுப் பெண்ணா கொண்டதுக்கு நான் கண்ட பலன் இதுதானா? போகட்டும், இந்தக் கருணைக்கிழங்கைக் கொஞ்சம் நறுக்கிக் கொடேன்; கொஞ்சம் இங்கே வர்ரியா அம்மா?"—என்று அமிர்தவல்லி அடுப்பங்கரையிலிருந்தபடியே அடுத்திருந்த கூடத்தில் நாற்காலியொன்றில் உட்கார்ந்துகொண்டு நாவலொன்றைப் படித்துக்கொண்டிருந்த தனது மருகியான ராஜத்திற்குக் கேட்கும்படி சொன்னாள்.



அதைக் கேட்ட ராஜம், தான் ஆர்வத்துடன் ,வாசித்துக்கொண்டிருந்த நாவலைத் தரையில் வீசி எறிந்துவிட்டுக் கோபம் மிகுந்தவளாய்த் தனது மாமியாரெதிரில் சென்று நின்று, "நாகரிகப் படிப்பறியாத கர்நாடக மூடங்களுக்கு நாவற்படிப்பின் ஆனந்தம் எப்படி விளங்கப்போகிறது? அதிலுள்ள ஆனந்தத்தை விட்டுவிட்டு இங்கே வந்து அனலில் அவஸ்தைப் படவேணும் என்று எனக்கென்ன தலைவிதியா? நவரசங்களும் ததும்பும் அற்புத நாவலைப் படித்து ஆனந்திப்பதை விட, கிழங்கு நறுக்குவது மிகமிக முக்கியமான வேலையோ? உன்னாலே கையாலாகாவிட்டால் வேலைக்காரியைக் கூப்பிட்டு நறுக்கித்தாச்

சொல்கிறதுதானே ! வேலைக்காரி இருக்கச்சே அவளைக் கொண்டு வேலையை நடத்திக்கொண்டு போவதை விட்டுவிட்டு என்னிடத்தில் ஏன் உனது அதிகாரத்தைக் காட்ட வருகிறாய்? உனது பிள்ளை எனது கழுத்தில் தாலிகட்டி விட்டதினாலேயே, நான் உங்களுக்கு அடிமைப்பட்டு விட்டேனா என்ன? இனிமேல், இம்மாதிரி ஏதாவது அதிகாரம் பண்ண எந்தாயோ இருக்கிற மரியாதையையும் இழந்துவிடுவாய் பத்திரம்!''—என்று கர்ஜித்து தனது மாமியை ஒரு முறை விழித்துப் பார்த்துவிட்டு அவ்விடம் விட்டு அகன்றாள்.

ராஜாம்பாளின் கணவன் நாகபட்டினத்தில் முதலியார் வகுப்பில் பெருமை வாய்ந்ததொரு வம்சத்தில் பிறந்தவன். அவன் செல்வத்தில் சிறந்தவனுமன்று; வறுமை மிகுந்தவனுமன்று. நடுத்தர நிலையினனாகிய அவன், பத்துவருட காலத்திற்கு மேலாகவே வருடந்தோறும் வகுப்புகள் தவறாது தேர்ச்சியடைந்து வந்து முடிவில்—'பி-ஏ' பட்டம் பெறுவதற்குள் எவ்வளவோ துன்பங்கட்கு உட்பட நேர்ந்தது. ''ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு''—எனும் முதுமொழிக் கிணங்க, தனக்கு நேர்ந்த பலவித துன்பங்களிலும் சற்றும் மனம் தளராது, இரவு பகலாகப் பலவித புத்தகங்களையும் படித்துப் படித்து மூளையில் ஏற்றிக்கொண்டு பரீட்சைகளில் வெற்றி பெற அவன் எடுத்துக்கொண்ட சிரமம் கொஞ்சமன்று. அவனது கல்விச் செலவுகளின் பொருட்டுப் பணம் அனுப்பிவைக்க, அவனது தகப்பனார் தமக்கிருந்த சொற்ப நிலங்களையும் விற்றுவிட நேர்ந்தது. எனவே, அவன் உத்தியோகத்தில் தலைப்பட்டபோது அவனுக்குச் சொந்தச் சொத்துக்களாக இருந்தவை ஒரு கல்வீடும் ஒரு தென்னந் தோப்பும் ஒரு புளியந் தோப்புமே. அத்தகைய நிலையில்—எண்ணிலாத பலவித கஷ்ட நஷ்டங்களுக்குப் பிறகு 'பி—ஏ' எனும் இரண்டு எழுத்துக்கள் தன் பெயருக்குப் பின் வாலாகப் பிணைக்கப்படுவதற்கு அவன் உரிமை உடையவன் ஆனபின்னர்—'ரிஸல்ட்' தெரிந்த மறுநாள் முதலே, ஏதேனும் உத்தியோகம் ஒன்று கிடைக்காதா என்னும் ஏக்கத்துடன் பற்பல விடங்கட்கும் மனுக்கள் எழுதி அனுப்பத் தொடங்கினான். அவ்வாறு விண்ணப்பங்கள் எழுதியும் நேரில் பல விடங்கட்குச் சென்றும் பகீரதப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்த அவனது பொறுமையை ஆறுமாத காலமாகச் சோதித்து வந்த பின்னர் ஆண்டவனே முடிவாக அவனுக்கு முப்பது ரூபாய் சம்பளத்தில் தாலுகா ஆபீஸ் ஒன்றில் ஒரு வேலை—இல்லை—பதவி கிடைக்கச் செயதார்.

தன்னிடம் ஒப்புவிக்கப்பட்ட வேலையை மேலதிகாரிகட்குத் திருப்தி உண்டாகுமாறு தன்னால் கூடியவரையில் வஞ்சகமின்றிக் கவனித்துப் பார்த்து வந்ததன் பயனாக, உத்தியோகத்தில் அமர்ந்த மூன்றாம் வருடத் தொடக்கத்தில் அவனது சம்பளம் நாற்பது ரூபாயாக உயர்ந்தது. அதன்பின், க. மு. சாமிநாத முதலியார் எனும் தனது திருநாமத்தை சம்பள உயர்வுக்கு ஏற்றபடி தான் ஒரு இந்தியன் என்பது மற்றவர்களுக்குத் தெரிந்துவிடாதிருக்கவேண்டி கே. எம். எஸ். நாதன் என்று சுருக்கிக்கொள்வானாயினன். சுமாராகக் குடித்தனம் நடத்திவரப் போதிய வருமானம ஏற்பட்டுவிட்டதன் பயனாக, அவனுக்குத் தாங்கள் இருக்கும்போதே விவாகம் நடத்திப் பார்த்து

---

மக்கள் உடம்புக்கு வேலை கொடுப்பதுபோல் மூளைக்கும் வேலை கொடுத்தால்-சந்தோஷமாயிருக்கச் சிரத்தை எடுத்துக்கொள்ளுவதுபோல் ஒழுக்கமாயிருக்கவும் சிரத்தை எடுத்துக்கொண்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்.

விடவேண்டும் எனும் பெருவிப்பம் அவனது பெற்றோர்கட்கு ஏற்பட்டது. அவ்விஷயத்தை அவர்கள் தங்கள் மகனுக்குத் தெரிவித்ததற்கு அவனும் இணங்கினன் எனினும், தனது வாழ்க்கைத் துணைவியாக வருபவளைத் தானே தனக்குத் திருப்தி உண்டாக்கக்கூடியவளாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும் என்பதில் சாமிநாதன்—இல்லை—எம். எஸ். நாதன் மிக்க உறுதி உடையவன் ஆனான்.

அத்தகைய உறுதியுடன் கூடிய அவன், பிறர் எவருடைய உதவியுமின்றித் தானே தனது மனைவியாகத் தேர்ந்தெடுத்து மணந்துகொண்ட சீமாட்டி தான், மேற் குறிப்பிட்டவாறு அமிர்தவல்லியுடன் எதிர்த்துரையாடிய அவளது மருமகளான ராஜம் என்பவள். அவளது பெற்றோர் சற்று தனவந்தர்கள் ஆதலின், அவர்கள் தங்களது மகளை அவளது இஷ்டப்படியே நவீன நாகரிக முறையில் வளர்ந்துவர விட்டுவிட்டனர். ராஜம் கல்வி பயில நேர்ந்த கலாசாலை கிறித்துவ கலாசாலை யாதலின், தனது சொந்த மதமான இந்து மதத்தின் சிறந்த தத்துவங்களுள் எவற்றையும் உணர்ந்துகொள்ளக் கூடிய சந்தர்ப்பம் எதுவும் அவளுக்கு வாய்க்காமற் போயிற்று. இளம் பருவம் முதலே நடை உடை பாவனைகளில் கிறிஸ்துவ முறையையே பின்பற்றி நடந்துவந்த அவளுக்கு, இந்து சமயத்தின் உயர்ந்த கருத்துகளை அறிந்துக்கொள்ளும் ஆர்வம்கூட இல்லாமற் போய்விட்டதில் வியப்பொன்றுமில்லை. ஏசுநாதரின் மலைப்பிரசங்கம் முதலிய சிரிய வேதாந்த விஷயங்கள் பலவற்றையும் சாதாரணப் புத்தகப் பாடங்களைப் படிப்பதுபோல் பைபிலில் அவள் படித்திருந்தாளாயினும், அவற்றைப் பசுமரத்தாணி யெனத் தனது அகத்தில் பதிய வைத்துக்கொண்டாளில்லை. கண்ணெதிரில் காணப்படும் இவ்வுலகத்தில் இருக்கும்வரை, வாழ்நாட்களை எவ்விதக் கவலையுமின்றிச் சந்தோஷமாகக் கழிப்பதை விட்டுவிட்டு, இனி இவ்வுடல் மறைந்த பின் எங்கேயோ இருப்பதாகச் சொல்லப்படும் சுவர்க்க நரகங்களைப் பற்றி இப்பொழுதே கவலையெடுத்துக்கொள்வது பைத்தியக்காரத்தனம் என்பதே அவள் அபிப்பிராயம். வாழ்வில் அறிந்தோ அறியாமலோ செய்ய நேரும் பாவங்கள் எல்லாவற்றையும் கர்த்தரைக்குறித்துப் பிரார்த்தனை செய்வதினாலேயே போக்கிக்கொண்டு விடலாம் என்பது அவள் எண்ணம். அப்பிரார்த்தனை எத்தகையதாக இருக்க வேண்டுமென்பதைப் பற்றி, அவளுக்கு எவ்விதக் கவலையும் இல்லை. ஆதலால் அவள் உயிர்க்கு உறுதி பயக்கக்கூடிய உண்மைப் பொருள்களை உணர்ந்து கொள்வதிலாவது, பெரியோர்க்குக் கீழ்ப்படிவதிலாவது சிறிதும் சிரத்தை எடுத்துககொள்ளாதது இயல்பே. வாழ்க்கைத் துறையில் தனக்கு எவ்வித சிரமமும் ஏற்படாதவாறு உணவு உடை முதலியவற்றை அளித்துவருவதற்காகவும், இன்ப நுகர்ச்சிக்காகவுமே தான் ஒருவனது மனைவியாக இருந்துவர வேண்டுமென்பது—இல்லை—இருந்துவரலாம் என்பது அவள் நினைவு.

அத்தகைய குணாதிசயங்களை உடைய அவளது கட்டுரை ஒன்று, ஆங்கிலப் பத்திரிகை ஒன்றில் அவளது படத்துடன் பிரசுரிக்கப்பட்டிருந்ததைக் கண்ணுற்ற எம். எஸ். நாதன், அவளே தனக்கு எவ்விதத்திலும் ஏற்ற ஒப்பற்ற காதலியாவாள் என்று தனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டான். அதன்மேல் அப் பத்திரிகையின் சொந்தக்காரரிடம் சென்று அவளது விலா

---

பிறருக்கு வரும் கல்வி செல்வங்களைக் காணும்போது, பொறாமையின்றி மகிழ்தலே நன் மனசுக்கு அழகு.

சத்தை விசாரித்துத் தெரிந்துகொண்டு அவளிடம் சென்று தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டான். அது முதல், நவீன நாகரிகப் பித்து மிகுந்த அவ்விரு வரிடையில் நட்பு வளர்ந்துவரத் தொடங்கியது. அது நாளடைவில் முதிர்ந்து வந்ததன் பயனாக ஏற்பட்டது உயிரொடு கலந்த உண்மையன்புடைய உயரிய காதல் அன்று; தெய்விகக் காதலின் வாசம் வீசப்பெறாதவர்களிடையில் விளையக்கூடிய ஒருவித விருப்பமேயாம். அவர்களிடையில் விவாக விருப்பம் எழுந்தபோது, அவ்விருவரும் 'பீ-ஏ' பரீட்சைகளில் தேர்ச்சி பெற்றுப் பட்டம் பெற்றுவிட்டனராதலின், அஃதொன்றே அவர்களுக்குள் சிறந்த ஒற்றுமையை உண்டாக்கப்போதியதாக இருந்தது. அச்சமயத்தில், அவர்களிடையில் வேறு எத்தகைய நாட்டமும் இருக்கவில்லை.

மிஸ். ராஜம் பீ. ஏக்கும், மிஸ்டர் நாதன் பீ. ஏக்கும் திருமணம்-இல்லை-கூட்டுறவு ஏற்பட்டு ஆறுமாதங்கள்வரை அவர்களது வாழ்வு சந்தோஷமாகவே இருந்துவந்தது. ராஜம் குடும்ப வாழ்வில் புகுந்த சில மாதங்கள் வரை தனது கணவனுக்கு எவ்வெவை அதிருப்தி அளிக்கக்கூடியனவோ அவை தனக்கு மிக்க விருப்ப முடையனவாக இருந்தும், பரஸ்பரம் சந்தோஷ வாழ்வை முன்னிட்டு அவற்றை விட்டுக்கொடுத்துவந்தாள். ஆனால், அத்தாராள நோக்கத்தை ஆறு மாதங்கட்கு மேலும் கடைப்பிடித்து வாழப் போதிய சகிப்புத்தன்மை அம்மாது சிரோமணிக்கு இல்லாமற் போயிற்று. அவள் கேவலம், 'கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருஷன்' எனும் முதுமொழிப்படி—தனது கணவனுக்கே தன்னை அடிமைப்படுத்திவிட்டுத் தனது உணர்ச்சிகள் விருப்பங்கள் முதலிய எல்லாவற்றையும் தனக்குள்ளாகவே அடக்கிக்கொண்டு வாழ்ந்துவர, தான் என்ன ஒரு ஜடப்பொருளா என எண்ணலானாள். தற்கால நவீன நாகரிகம் சிறிதும் உணராது பழங்காலப் பழக்க வழக்கங்களிலேயே பற்றுகொண்டு நிற்கும் கர்நாடகப் பெண்களுள், தானும் ஒருத்தியாக வாழ்ந்துவருவதாயின் தான் பெற்ற பீ. ஏ. பட்டத்தின் பிரயோசனந்தான் யாதாகும் எனவும் அவள் சிந்திக்கலானாள். எனவே, தனது கணவனுக்குத் திருப்தி அளிக்கக்கூடியவை எவை அதிருப்தி அளிக்கக்கூடியவை எவை என்பதைக் கவனித்து நடந்துகொள்வதில் சிரத்தை எடுத்துக்கொள்வதை அவள் கைநழுவ விட்டுவிட்டாள்.

அது முதலாக, தான் விரும்பும் இடங்களுக்கெல்லாம் தன் இஷ்டப்படியே ராஜம் சென்றுவரத் தொடங்கினாள். நவீன நாகரிகப் பெண்களின் முன்னேற்றத்தை முன்னிட்டு, ஆங்கிலக் கல்வி பட்டங்கள் பெற்ற மாதர்கள் கண்ட சங்கத்திற்கு அவள் உதவிக் காரியதரிசி ஆனாள். அதன் பொருட்டும் பிற கேளிக்கைகட்கும் நினைத்தபோ தெல்லாம் நினைத்த இடங்கட்கெல்லாம் அவள் சென்று வருவதும், அவளது தோழிகள் வீட்டிற்கு அடிக்கடி வந்து செல்வதும் வழக்கமாய்விட்டது. மிஸ்டர். நாதனின் வீட்டில் அவள் செய்துவந்த திருவிளையாடல்கள் பற்பல. அவற்றுள் பலவும் அவனுக்கு மிக்க வெறுப்பையே விளைவித்துவந்தன எனினும், தனது மனைவியின் மன மகிழ்ச்சிக்குத் தான் தடையாக இருப்பானேன் என எண்ணியவனேபோலும் அவன் அவற்றைக் கண்டும் காணாதவன் போல நடந்துவந்தான். எனவே, ராஜத்தின் திருவிளையாடல்கள் நாளுக்கு நாள் அதிகரித்துவந்தன.

---

தான் அறத்தில் நிற்பதால் பிறர் அடையும் சாந்தியும் சந்தோஷமும் இவ்வளவு என்று கணித்தல் அநேகமாக இயலாத காரியமாகும்.

ஒருநாள் மாலை. ராஜம் தனது தோழிகள் அனைவர்க்கும் தன் வீட்டில் ஒரு 'டீ-பார்ட்டி'க்கு ஏற்பாடு செய்தாள். அச்சமயத்தில் நவீனநாகரிக முறைப் படி உடை உடுத்திய ஐரோப்பிய பெண்மணிகள் அவள் வீட்டிற்கு விஜயம் செய்தனர். அவர்களுக்கு உப்புமா பகோடா ஜிலேபி முதலிய பலகாரங் களைக்காட்டிலும், மாமிசத்தில தயாரிக்கப்பட்ட சிற்றுண்டிகளே பெரிதும் ஆனந்தம் அளிக்கக்கூடியனவாக இருக்குமென்னும் எண்ணத்தினால், நாக பட்டினத்திற்குள் பிரசித்திபெற்ற தொரு மில்டேரி ஓட்டலி லிருந்து ஒரு வேலையாள் மூல மாக வரவழைத்த மாமிசச் சிற் றுண்டிகளை 'ரௌண்ட் டேபில்' என்னும் வட்டமேஜை மீது 'ப்ளேட்டுக'ளில் பரப்பிவைத்து—அவற்றை உண்ணச் சொல்லி உப சரித்து நின்றாள். அவர்களோடு அவள் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்த வேளையில், அவ ளது மாமியான அமிர்தவல்லி தற் செயலாக அவ்விடத்தை அடைந் தாள். பரம்பரைச் சைவர்களின் குலத்தில் உதித்து மாமிசத்தைக் கனவிலும் கருதாது, அது எவ்விதத்திலும் தனது வீட்டில் தலைகாட்டவும் இடங்கொடாது, ஆசாரசீலம் உடையவளாய் வாழ்ந்துவந்த அமிர்தவல்லி, தனது வீட்டில் தன் கண்ணெதிரில் எவ்விதத்தி லும் தனக்குப் பிடிக்காத ஐரோப்பிய பெண்கள் தட்டுகளிலிருக்கும் மாமிசச் சிற்றுண்டிகளைக் கரண்டிகளின் துணைகொண்டு எச்சில் பண்ணித் தின்பதைக் கண்டதும் ஆத்திரம் மிகுந்தவள் ஆயினள்.



எனவே, அவள் தனது மருகியை நோக்கி, "ஏண்டியம்மா! இந்த அக் கிரமம் கடவுளுக்குப் பொறுக்குமா? இந்த மேனமினுக்கிகளை என் வீட்டிற் குள் அடிக்கடி வந்து போக இடங்கொடுத்தது இப்படியா முடியணும்? நான் ஒருத்தி இருக்கிறேன் என்னுகூட நினைக்காமே—பரம்பரைச் சைவமான என் வீட்டிலே, கொஞ்சங்கூட வெக்கம் மானம் இல்லாமே இந்த மாதிரி விபரீத விருந்து நடத்தலாமா? கேக்கறவா இல்லாவிட்டா இப்படியெல்லாம் கூத்தாடி னால்தானே நீ தர்பார் நடத்தர லட்சணம் தெரியும்! ஏதோ ரொம்ப ரொம்ப படிச்சவளாமே—பீ. ஏ. பாசு பண்ணி விட்டவளாமே—வீட்டுக்கு நாட்டுப் பெண்ணு வந்தால், காதுகுளிர ஏதாவது இதோபதேசம் செய்யமாட்டாளா, குடும்பத்தைச் சரிவர நடத்தி எல்லோர்க்கும் சந்தோஷம் கொடுக்க மாட் டாளா என்னு உன்னை என் பிள்ளைக்கு ஆம்படையாளாக் கொண்டதன் பலன் இதுதானா? உன்னைச் சொல்லக் குத்தமில்லடீ! வீணே வீட்டிலே கல வரத்தை வளப்பானேன் என்னு வாயை மூடிண்டிருந்து உனக்கு இவ்வளவு தூரம் இடங்கொடுத்த என்னை யல்லவா நொந்து கொள்ளணும்! அந்தப்

---

நன்னெறி அதிகக் கரடு முரடென்றாவது அதிகக் கஷ்டமென்றாவது கூறப்படக் காணோம். கூறப்பட்டிருப்பதெல்லாம் அது குறுகியது என்றும், கண்டுபிடிக்கக் கடினமானது என்றுமே.

பையல் உன்னை ஆரம்பத்திலேயே அடக்கி ஆண்டிருந்தால், இவ்வளவுக்கு வந்திராதே"—என்று கூறினள்.

அவள் பேசி முடிந்தவுடன், ராஜத்தின் முகத்தில் ஜொலித்த கோபாக்கினியைக்கண்ட அங்கு நின்றுகொண்டிருந்த ஓட்டல் வேலையாள், மாமியும் மருகியும் மயிர் பிடித்துக்கொண்டு நிற்கப்போகும் வேடிக்கையைப் பார்க்கலாமென்று மகிழ்ந்து நின்றான். உடனே, ராஜம் சினத்தால் சிவந்த கண்களுடன் கூடியவளாய் பின் வருமாறு அதிகாரத் தொனியில் பேசத் தொடங்கினள்:—

"எனக்குச் சொந்தமான எனது அதிகாரத்திற்கு உள்பட்ட என் வீட்டிலே, என் இஷ்டப்படியெல்லாம் நடந்துகொள்ள எனக்குப் பூரண சுதந்தரம் உண்டு. நீ என்னடீ என்னை அதிகாரம் செய்ய வருவது? இந்த வீட்டின் எஜமானனுக்கு ஜோடியான எஜமானி நீயா? நானா? ஏதோ இருக்கிற காலத்தை உல்லாசமாய்க் கழிக்கலாமே என்று பார்த்தால், என்னைக் கண்டிக்க உனக்கு என்ன தைரியம் பிறந்ததடீ! இதோ இவர்களெல்லாம் வைத்தவைகளை அப்படியே வைத்துவிட்டு எழுந்து விட்டார்களே! எனது அத்தியந்த சினேகிகளான இத்தனை பேரெதிரில், என்னை இவ்வளவு அவமானப்படுத்தி விட்டாயே! என்மானம் போச்சே! பவிஷு குலைந்ததே!! பச்சைப்பல்லக்கு ஏறிப்போகிற காலம் நெருங்குகிற கிழமுண்டையான உனக்கு, இப்படிப்பட்ட வாய்த்துடுக்கு எங்கிருந்து வந்ததடீ?"—என்று கூறிக்கொண்டே அமிர்தவல்லியிடம் சென்று, அவளது தாடையில் பலமாய் ஒரு இடி இடித்துக் காறி உமிழ்ந்துவிட்டுத் தனது தோழிகளிடம் திரும்பிவந்து, அவர்களை உபசரிக்கத் தொடங்கினள் 'பீ. ஏ.' பட்டம் பெற்ற ராஜம். அதற்கு மேலும் அங்கிருப்பது தகாது என்பதை உணர்ந்துகொண்ட அத்தோழிகள், எவ்வளவோ வேண்டிக்கொண்டும் அங்கு தாமதிக்க மனமில்லாதவர்களாய் அவளிடம் விடைபெற்றுச் சென்றனர். மருகியால் காறி உமிழப்பெற்ற மாமியான அமிர்தவல்லி, அவளோடு எதிர்த்துக்கொண்டு நின்றால் அதிக அவமானமே அடைய நேரும் என்பதை அறிந்தவளாய், ஆறாத்துயருடன் அவ்விடத்தை விட்டுச் சென்று தரையில் படுத்துக்கொண்டு தனது தலைவிதியின் கொடுமையை நினைந்து நினைந்து நெஞ்சுகலங்கிப் புலம்பிக் கிடந்தாள்.

அப்பொழுது மாலை ஆறுமணி இருக்கலாம். ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்து சேர்ந்த நாதன், சமையலறையில் தனது தாயார் காணப்படாமையால் அவ்வறைக்கு எதிரறையில் சென்று பார்த்தான். அவன் அங்கு கண்ட காட்சியினால் பெரிதும் திடுக்கிட்டு நின்றான். விளக்கு ஏற்றும் சமயமான அவ்வேளையில். அவன் அன்னை தரையில் படுத்திருந்தது—அதிலும்—குப்புறப் படுத்திருந்தது அவனுக்குப் பெருவியப்பை உண்டுபண்ணியது. மிஸ்டர் நாதன் ஆங்கிலத்தில் 'பீ. ஏ.' பட்டம் பெற்று—நவீன நாகரிகத்தில் பெரும் பித்து உடையவனாக இருந்தும், தனது தாயாரிடத்தில் இளமைப்பருவந் தொட்டுக்கொண்டிருந்த விச்வாசத்தில் மாறாமலே நடந்து வந்தான். எனவே, அன்பு ததும்பும் குரலில் அவளை "அம்மா! இவ்வேளையில் ஏன் இவ்வாறு

---

செய்வதற்கு ஏதேனும் ஒன்று—அன்பு செய்வதற்கு ஏதேனும் ஒன்று—நம்பி எதிர் பார்ப்பதற்கு ஏதேனும் ஒன்று—இம் மூன்றும் அடையப்பெறுவதே இன்பவாழ்வின் அவசியம்.

படுத்திருக்கின்றீர்கள்? உடம்புக்கு ஏதேனும் அசௌக்கியமா என்ன?''— என மிக்க பரிவோடும் கேட்டான். தன் மகனது குரலைக்கேட்ட அமிர்தம், எழுந்து உட்கார்ந்து இருகன்னங்களிலும் வழிந்தோடிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, தன் மருகிக்கும் தனக்கு மிடையில் நடந்தவற்றை நடந்தபடியே அவனுக்குத் தெரிவித்துவிட்டு மேலும் பேசுவாளாயினள்:—

"நானும் ஒரு மாமியின்கீழ் மருமகளாயிருந்து குடித்தனம் நடத்தியவள் தான். என் மாமியிடம் நான் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. அவள் என்னை எவ்வளவு கொடுமையாக நடத்தினலும், அதுக்காக அவளோடு எதிர்த்துண்டு நில்லாமே என் தலைவிதியை நினைச்சு என் மனததை சமாதானப் படுத்திண்டு எவ்வளவோ பணிவாக் கீழ்ப்படிந்து நடந்து வந்தேன். என் காலத்திலாவது எனது மருமகளாக வருபவளை—எனது மறுமகளாகவே— எனது சொந்தப் பெண்ணைப் போலவே அன்போடு நடத்தி வரவேணும் என்ற உறுதியை ஈச்வரன் அப்பவே என் மனத்தில் உண்டாக்கி விட்டான். அதன்படி உனது அருமைக் கண்ணுட்டியான உன அருமைப் பெண்டாட்டியை இது வரைக்கும் எவ்வளவோ ஆசையாய் நடத்தி வந்தும்—அவள் போன வழிக்கெல்லாம் அவளைத் தடை செய்யாமல் விட்டு விட்டு



அவள் மனம் கோணமல் நடந்து வந்தும்—அவளுக்கு வீட்டுக் காரியத்திலே ஒரு கவலையும் இல்லாதபடி எல்லாத்தையும் நானே பாத்துண்டு வந்தும், இன்னைக்கி அவள் செய்த அககிரமமும் பேசிய பேச்சும் இதுவரைக்கும் அவள் மேலே கொண்டிருந்த ஆசையை யெல்லாம் அடியோடு அழித்து விட்டது. இவ்வீட்டிலே அவள் இட்டதே சட்டமா இருக்கு. உனக்கேத்த ஜோடியாக உன்னைப்போல 'பீ. ஏ.' பாசுபண்ணி விட்டவள் வீட்டு ராணியா வந்துட்டாளென்னு, நீயும், அவள் மோகத்திலே மயங்கிக்கிடக்கிறுய்! முடிவில், அவள் என்ன செய்து விட்டுப்போக இருககிறளோ? ட்ராமா வேஷக்காரி மாதிரி நித்தநித்தம என்னவோ ஒரு மாவை மூஞ்சிலே பூசிண்டு நெத்தியிலே கிறிஸ்து வச்சியாட்டமா பொட்டுகூட வைககாமே, கழுத்துக்குக் கீழே மார்கூட தெரிகிறபடி சட்டை போட்டுண்டு, அமங்கலி மாதிரியா வெள்ளை உடுத்திண்டு ஆண் வந்தாலும் பெண்வந்தாலும் கொஞ்சங்கூட சங்கோச மில்லாமே நாற்காலியிலே உட்கார்ந்துண்டிருந்து, பதிவிரதைகளுக்கு உயிர் மாதிரியான நாணத்தை அறவே ஒழித்துவிட்டு இப்படி யெல்லாம் கூத்தாடாதுதானு 'பி. ஏ.' பாசு பண்ணதுககு லட்சணம்? ஆயிரம் படிச்சவளானலுமே சட்டிபானையைத் தொடாதவளும் பெண்ணுவாளா? அந்திவேளையிலே, திருவிளக்கு

---

அறிஞர் நஷ்டம் வந்தால் ஒருபொழுதும் அழுதுகொண்டிரார். உடனே துன்பத்தைத் துடைக்கும் வழியைச் சந்தோஷமாய்த் தேடுவதிலேயே கருத்தைச் செலுத்துவர்.

வத்திவைத்து மகாலக்ஷ்மியை ஒரு நாளாவது அவள் கும்பிட்ட துண்டா? பாவிமகளுக்கு கொஞ்சங்கூடத் தெய்வத்திடத்திலே பயபக்தி இல்லாமற் போச்சே! தான் நடமாடா இடத்தெல்லாம் தரைமேலே இழுத்துண்டு போம்படியா பாதங்கூட தெரியாமே சேலைகட்டிண்டு அவள் திரியரதைப் பார்த்தால், இனிமேல் விளக்குமாத்தால் கூட கூட்டவேண்டாம் போலி ருக்கு! நல்ல வாக்கு நடுவே இருக்க, கோணைவாக்கு குறுக்கே எடுப்பானேன்? தண்ணீர் குடிச்சாக்கூட டம்ளரை வாயிலே வச்சி கடிச்சுண்டுதான் குடிச்சுத் தொலைக்கணுமோ? இப்படி யெல்லாம் ஏறுமாறு நடந்துண்டாத்தான் நாக ரிகம் தெரியுமோ? எனக் கென்னவோ அப்பா, அவள் நடத்தை கொஞ்சங் கூடப் பிடிக்கவேயில்லை! அவள் தொட்ட பாத்திரத்தைக்கூட நான் தொட ரத்துக்கில்லே! எல்லாத்துக்குமேலே பரம்பரைச் சைவர்களே வாழ்ந்துவந்த இந்த வீட்டிலே, அவளும் அவள் கூட்டாளிகளான சிறுக்கிகளுமா சேர்ந் துண்டு—ஆட்டுக்கறியும் கோழிக்கறியும் தின்னு ஆபாசப்படுத்தவும் ஆரம்பிச் சுட்டா. உன்னைக்கூட வெளியிலே ஓட்டலிலே அன்னிய பதார்த்தம் சாப் பிடச் செய்திருப்பாள் போலிருக்கு! அவளுக்காக நீ எது பண்ணவும் தயாரா யிருப்பாய் என்பது எனக்குத் தெரியாதா என்ன? உன்னைப்பெற்ற கட மைக்கு—நீ மோசம் போகாதிருக்கணுமே—நீ க்ஷேமப்படணுமே என்கிற நல்லெண்ணத்துடன், உனக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட் டேன். இனிமேலாவது அவளிடம் கொஞ்சம் ஜாக்கிரதையா நடந்துக்கோ. எது எப்படியானாலும் இனிமேல் ஆண்டவன்தான் உன்னைக் காப்பாத்த வேணும்''—என்று தனது பிரசங்கத்தை முடித்துவிட்டுச் சமையலைக் கவ னிக்க அடுப்பங்கரையை நோக்கிச் சென்றாள்.

தனது தாயாரின் குணம் நாதனுக்கு நன்கு தெரியும். கேவலம், ஏனைய பல மாமியார்களைப்போல சதிபதிகளின் சந்தோஷ வாழ்வுக்குப் பெரும் முட் டுக்கட்டையாக இருக்கும் ஒருத்தியைப் போலன்றி, பெற்ற மைந்தனின் சந் தோஷத்தையே பெரிதும் நாடி மருமகளை மறுமகளாகவே பாவித்து நடத் தும் உத்தம மாமிமாருள் அவளும் ஒருத்தி என்பதை அவன் நன்கு உணர்ந் திருந்தான். தன் மனம் வருந்தக்கூடாது என்னும் எண்ணத்துடன், ராஜத் தின் செயல்கள் பற்பலவும் அவளுக்குப் பெருவெறுப்பை விளைவித்து வந் திருந்தும், அவற்றை அவள் மிக்க பொறுமையுடன் அதுவரை சகித்து வந் திருந்ததும் தன்பொருட்டாகவே என்பதையும் அறிந்தான். அவள் கூறி யவை முழுவதும் உண்மையே என்பதில் அவனுக்கு எவ்வித ஐயமும் ஏற் படவில்லை. தனது தயாரின் அரிய பொறுமையையும் தனது மனைவியின் ஒழுங்கீனத்தையும் அவன் ஆழ்ந்து ஆலோசிப்பானாயினன். பொறுமையிலும் புத்திரவாஞ்சையிலும் கற்பிலும் சிறந்து விளங்கும் அமிர்தவல்லியின் அறி வுறுத்தல் தானோ ஆண்டவனின் அருள்தானோ உயரிய உண்மைத் தோற்றந் தானோ வேறு எதுவோ அவனது அகத்தில் புதியதொரு பெரும் மாற்றத் தைத் தோற்றுவித்தது. இல்லற வாழ்க்கைக்கு இன்னுயிர் போன்ற உயி ரொடு கலந்த உண்மைக்காதலைக் கவனியாது கேவலம் 'பீ. ஏ.' எனும் இரண் டெழுத்துகளையும் வெளிப்பகட்டையுமே நோக்கி ராஜத்தை மணந்து

---

உண்மையான நட்பு மெதுவாக வளரும் செடியாகும். நட்பு என்று பெயர்பெற உரியதாகுமுன் அது பல கஷ்டங்கள் வந்தாலும் ஈடழியாதிருத் தல் அவசியம்.

கொண்டதன் விபரீத பலன்கள் தனக்குத் தக்க படிப்பினையைப் புகட்டி விட்டன என்பதையும் அவன் உணர்ந்து கொண்டான். சதிபதிகளின சந்தோஷ வாழ்வுக்கு உடலழகையும் கல்வியையும் தவிர்த்து வேறொன்றும் அத்தியாவசியமான தேவையாயிருக்கின்றது எனும் உண்மையை அன்றே அவன் உணர்ந்தான். அவ்வொன்றைத்தான் தமிழ்ப்பண்டிதர்கள் 'காதல்' என்று கூறுகின்றனரோ எனவும் ஐயுற்றான். தான் அதுவரை நடந்துவந்த தெல்லாம அறியாமையே என்பதையும் அவன் அறிந்தான். சுருங்கக்கூறின், ஆய்ந்தோய்ந்து பாராததனால் அவனைப் பற்றியிருந்த நவீனநாகரிகப் பித்து—வீண்பிரமை—பெரிதும் அவனது அகத்தினின்றும் அகன்றது என்னலாம்.

இரவு ஒன்பது மணிக்குமேல் தனது பள்ளியறையை அடைந்த நாதன், கட்டிலின்மீது படுத்திருந்தபடியே தன்னைக்கண்டு புன்னகைபுரிந்த தன் மனைவியைக் கண்டான். ஆனால், அப்புன்னகை அவனது மன மாற்றத்தை மாற்றுவதாயின்றி, சீற்றத் தீயில் நெய் சொரிந்ததுபோலும் ஆயிற்று. எனவே, அவளருகில் சென்று நின்ற அவன், அவளை மிக்க வெறுப்புடன் நோக்கித் தனது தாயார் கூறியவற்றையெல்லாம் எடுத்துரைத்து அனைத்தும் உண்மை தானா என வினவினான்.

'O! yes! All are true! What else can I do? Will you think her conduct is best? உமக்குக் கூடவா 'சிவிலிசேஷன்' தெரியவில்லை! அவள் நடந்துகொண்ட விதம் எனக்கு "வெரி ஷேம்" ஆக இருந்தது. கழுதைக்கு ஆனாற்போல, "ஏஜ்" ஆயிட்டா மாத்திரம் என்ன பிரயோஜனம்? என்னுடைய "ப்ளஷருக்கு" இவள் எப்படி தடையாக நிற்கலாம்? என்னுடைய நடத்தையைக் கண்டிக்க இவளுக்கென்ன ரைட் இருக்கு? இன்னொருத்தியாமட்டும் இருந்தாலோ, அவளை என் காலில் போட்டிருக்கிற ஸ்லிப்பர்ஸாலேயே நாலஞ்சு அடி அடித்து விட்டிருப்பேன்! உம்மைப் பெற்றவள் ஆனதாலே, அவளை மன்னித்துவிட்டேன்! அந்தக் கிழட்டு முண்டைக்காகப் பேச வந்துவிட்டீரே, நீர் 'பீ—ஏ' பாஸ்பண்ணிக் கற்றுக்கொண்ட 'சிவிலிசேஷன்' இவ்வளவுதானா?"—என்றுகூறி புன்னகை புரிந்தாள் ராஜம்.

அவளது உரைகளைக்கேட்டு அகம் பதைத்துச் சினத்தால் கொதித்து நின்ற நாதன், அத்தகைய பிடாரியைப் பெண்டாகக் கொண்டுவிட்டதற்குத் தனக்குள் தன்னைப் பெரிதும் நிந்தித்துக் கொண்டவனாய், "உன்னைச் சொல்லக் குற்றமில்லையடி! பாழும் நவீன நாகரிகப் பித்தால் பகுத்தறிவை இழந்து

---

ஒருவன் அநேக விஷயங்களில் வைதிகமா யிருக்கவேண்டும். இல்லையெனில் அவனுக்குத் தன் சொந்த அவைதிகக் கொள்கையைப் போதிக்க ஒருபொழுதும் நேரம் இராது.

உனது உண்மைக் குணத்தை உணர்ந்துகொள்ளாது வெளிப்பகட்டில் மயங்கி உன்னை மணந்துகொண்டது மல்லாமல், இவ்வளவுதூரம் கொழுப்பேறும்படியாக நீ ஆடிய ஆட்டங்களுக்கெல்லாம் இதுவரையில் இடம் கொடுத்துவந்த என்னுடைய பேடித்தனத்தை யல்லவா இகழவேண்டும்? இந்த வீட்டில் இனியும் இருக்கவேண்டும் என்னும் எண்ணம் உனக்கிருந்தால், இனியாவது இம்மாதிரியான அதிக்கிரமச் செயல்களைச் செய்யாமல் இரு; இல்லாவிட்டால், என்னவாகும் தெரியுமா?''—என்றான்.

அவனது உரைகளைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்துநின்ற அவள், "என்ன ஆகும் ஓய், என்ன ஆகும்? என்னை வீட்டினின்றும் விலக்கிவிடுவீராக்கும்! அவ்வளவுதானே! வேறு என்ன செய்யமுடியும்? எனக்கு லாவின்படி சேர வேண்டிய ஷேருக்குக், கோர்ட்டில் சூடுபோட்டு வாங்கிக்கொள்ள எனக்குத் தெரியாதா என்ன? 'Husband and wife are equal.' அதைத் தெரிந்து கொள்ளாமல் என்னை அதிகாரம் பண்ணப் பார்க்கிற உம்மிடத்திலே, இனிமேல் என்ன ப்ளஷரை எதிர்பார்க்க முடியும்? சிவிலிசேஷன் தெரியாத மூடத்துடன் எப்படி குஷாலாக வாழமுடியும்? Remember, I am not a slave to you! மஞ்சளை அரைச்சுப் பூசிக்கொண்டு காது மூக்கெல்லாம் குத்திக்கொண்டு தலைமுதல் கால்வரையிலே என்னென்னவோ நகைகளைக் குறத்திபோல மாட்டிக்கொண்டு, தெரு மண்ணைக்கூட மிதியாமே அடுப்பங்கரைக்குள்ளேயே புழுங்கிக் கிடக்கிற பட்டிக்காட்டு மூடம்தான் உமக்கு ஜோடியான கட்டை!''—என்று சிடுசிடுத்துச் செப்பிநின்றாள்.

அந்நிலையில், அவளுடன் அதிகப்பேச்சு வைத்துக்கொண்டால் அவமானத்திறகே இடமாகு மென்பதை அறிந்துகொண்ட நாதன், மௌனமாக அறையைவிட்டு வெளியேவந்து தாழ்வாரத்தில் படுத்துக்கொண்டான். அச்சம்பவம் நடைபெற்றுச் சில தினங்கள் சென்றன; சதிபதிகள் இருவரும் பரஸ்பரம் பேசாமலே இருந்து வந்தனர். இரண்டு வாரங்களுக்குப் பிறகு, நாகபட்டினத்துக் கடற்கரையோரமாக ஒருநாள் மாலை நமது கதாநாயகன் உலவிக்கொண்டிருந்தான். அச்சமயத்திலே, தனது மனைவியான ராஜம் நவீன நாகரிக முறைப்படி உடை உடுத்தி யிருந்த ஒருவனுடன் கொஞ்சிப் பேசிக்கொண்டிருந்ததை அவன் காணநேரவும், நெஞ்சு கொதித்து நின்றான். சில நிமிஷங்கட்குப் பின், அவ்வாடவன் கன்னத்தில் அவள் முத்தமிட்டதைச் சகியாத அவன் அவர்களெதிரில் சென்று நின்று அவளை மிகுந்த கோபத்துடன் விழித்து நோக்கி, "அடீ பட்டிச் சிறுக்கீ! குத்துக் கல்லாட்டமா உன்னை மனைவியாகக்கொண்ட நான் இருக்கும்போதே, இவனை மயக்கி உன் வலையில் அகப்பட்டுக் கொள்ளச்செய்ய மனம் துணிந்தது சர்வரட்சகரான கர்த்தாவுக்



நயனம் ஒன்று சொல்ல நாவொன்று சொல்லுமானால் நன்றாய் விஷயத்தை அறிந்தவன் நயனத்தின் மொழிகளிலேயே நம்பிக்கை வைப்பான்.

குப் பொறுக்குமா? உன்னை மனமார நம்பி உனக்காக நான் எவ்வளவு செலவிட்டேனடி! எவ்வளவு தூரம் உன் அக்கிரமச் செயல்களை பொறுத்துக் கொண்டிருந்தேனடி! நீ இப்படிப்பட்டவள் என்று ஒருநாளும் கனவில்கூட நினைத்திருக்க மாட்டேனே! இம்மாதிரியான விபசாரித்தனத்தை நான் அறிந்துகொள்ளாதபடி இதுவரையில் எப்படியடி மறைத்து வைத்துக்கொண்டிருந்தாய்?"—என்று வினவினன்.

"நீ என்னை வெறுத்துவிட்டபோது—எனக்கும் உன்னைப் பிடிக்காதபோது—என் மனத்திற்குப் பிடித்த வேறு எவருடனும் சல்லாபித்திருக்க எனக்குப் பூரண உரிமை உண்டு. ஒற்றுமையில்லாத தம்பதிகள் விவாகரத்து செய்து கொள்வது நவீன நாகரிகத்திற்கு இயைந்ததுதானே? இதைக் கண்டு நீ இவ்வளவு ஆத்திரப்பட, நான் என்ன என்றென்றும் உனது அடிமையா? சிவிலிசேஷன் தெரியாத மூடமாகிய உன்னுடன் காலம் கழிப்பதைவிட, இவருடன் இருப்பது எவ்வளவோ குஷாலாக இருக்கும். இனிமேல், உனக்கேற்ற கர்நாடக மூடம் எதையாவது கட்டிக்கொண்டு வாழ்ந்திரு போ!",—என்று வெகு அலக்ஷ்யமாகப் பதில் சொல்லிய ராஜம், அப் புதிய புருஷனுடன்—இல்லை—கள்ளக்காமுகனுடன் அவர்களுக்காக காத்துக்கொண்டிருந்த மோட்டாரில் ஏறிச் சென்றுவிட்டாள். அவளது பதிலைக் கேட்டவுடன் பிரமை பிடித்தவனாய் அக் கடற்கரையிலேயே அமர்ந்துவிட்ட நமது கதாநாயகன், பின்வருமாறு ஆலோசனையில் ஆழ்வான் ஆயினன்:—

"அந்தோ! பல வருடங்கள் பெரு வருத்தப்பட்டுப் படித்து 'பீ—ஏ' பட்டம் பெற்று, அப்பட்டத்தைப் பெற்ற ஒருத்தியை மணந்ததற்குப் பயன் இதுவேயோ? குண குணங்களை ஆராய்ந்து பாராது கேவலம் வெளிப்பகட்டில் மயங்கிவிட்ட எனக்கு, இறைவன் இத்தகைய கொடிய தண்டனையையா விதிப்பது! ஆங்கிலக் கல்வி பயின்றால்தான் என்ன? பகுத்தறிவை ராஜிநாமாச் செய்துவிட வேண்டுமா? அருள் வடிவான இயேசு பெருமானின் மணிமொழிகள் பலவற்றைப் படித்திருந்தும், சிலவற்றையேனும் அகத்தில் பதியவைத்துக்கொள்ளாது போய்விட்டேனே! இந்து சமயத்தில் பிறந்திருந்தும், அதன் சிறந்த கருத்துக்களுள் சிற்சிலவற்றையேனும் உணரா தொழிந்தேனே! யான் இந்துவும் அல்லேன், கிறித்துவனும் அல்லேன் ஆயினேனே! கல்வியில் நீண்ட காலத்தைக் கழித்திருந்தும், அதன் பயனாக உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைப் பொருள்கள் எவற்றையும் யான் உணரா தொழிந்ததற்கு இரங்குவதா? உயிரொடு கலந்த உண்மை யன்பை உன்னிப்பாராது, கேவலம் வெளிப்பகட்டில் மயங்கி மதிமோசம் போனதற்கு இரங்குவதா? நவீன நாகரிகப் பித்தில் ஆழ்ந்து, சாற்றைவிட்டுச் சக்கையைமட்டும் எடுத்துக்கொண்டு விட்டதற்கு இரங்குவதா? என் மனத்திற்குத் துன்பம் உண்டாகக் கூடாதென்று என் பொருட்டுத் தன் மருகிசெய்த இழிவுகளையெல்லாம் பொறுமையுடன் சகித்துக்கொண்டு வந்திருக்கும் என் அன்னையின் அன்புக்கு இரங்குவதா? யான் உயிருடன் இருக்கும்போதே ஊரில் பலரும் பழித்துக் கூறுமாறு இன்னொருவனுடன் கூடிச்சென்று, எனது இல்லற வாழ்வையும் அவ்வாழ்வில் இனி விருப்பம் கொள்வதையுங்கூடப் பாழாக்கிவிட்ட ராஜத்தின் சிறுமைக்கு இரங்குவதா? யான் எதன்பொருட்டு இரங்குவதோ?"

---

மனோதைரியம் இழந்தாலன்றி எவனையும் எந்தக்காலத்தும் உண்மையிலேயே அவன் தோற்கடிக்கப்பட்டான் என்று கூற இயலாது.




# ஸர். தி. முத்துசாமி ஐயர்.

(வி. எஸ். ராமசாமி.)

## பிறப்பும் வளர்ப்பும்

திருவாரூர் முத்துசாமி ஐயர் தஞ்சாவூர் ஜில்லாவிலே உச்சுவடி என்னும் கிராமத்திலே ஓர் எளிய குடும்பத்திற் பிறந்தவர். அவர் பிதாவாகிய வெங்கடநாராயண சாஸ்திரியார் அவர் சிறு வயதாயிருக்கும் பொழுதே காலஞ் சென்றுவிட்டபடியால், அவரையும் அவர் சகோதரரையும் சம்ரக்ஷிக்கும் கடமை அவர்கள் தாயாரதாயிற்று. அவ்வம்மையார் தம்மிடத்திருந்த சொற்ப திரவியத்தோடு திருவாரூருக்குப் போயிருந்து அவ்விருவருக்கும் தமிழ் அரிவரி முதலியன படிப்பித்தனர். அதற்குமேல் படிக்கப் பணம் இல்லாமல் போனதோடு முத்துசாமி ஐயர் அச் சிறுவயதிலேயே சம்பாதிக்கவும் நேர்ந்தது.

## படிப்பும் உத்தியோகமும்

முதன் முதல் அவர் மாதம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் ஒரு கிராமக் கணக்கனுக்கு உதவியாளாக அமர்ந்தார். இந்த அற்ப சம்பாத்தியதைக்கூட அவர் தாயார் நெடுநாள் அநுபவிக்கவில்லை; சிறிதுநாளில் இறந்தனர். தாயார் இளமையில் தம்மை வளர்த்த நேர்மையை முத்துசாமி ஐயர் அடிக்கடி நன்றியறிவோடு சொல்லுவாராம். அவர்க்குக் கல்வியில் அவ்வளவு அபிலாஷை உண்டானது அவ்வம்மையாரால்தான். 1846–ம் வருஷத்தில் முத்துசாமி ஐயர் அவ்விடத்துத் தாசில்தாராயிருந்த முத்துசாமி நாயக்கரைச் சந்திக்கநேர்ந்தது. ஒரு நதியின் அணை உடைப்புண்டதென்று செய்தி வர தாசில்தார் அதன் உண்மையறிந்து வரும்படி யாரையாவது போகச் சொல்வதற்காகக் கச்சேரிக்கு ஆள் அனுப்பினர். கச்சேரியில் முத்துசாமி ஐயர் ஒருவரே இருந்தபடியால், அவர் துணிந்து தாசில்தார்முன் வந்து நின்றார். தாசில்தாரும் காரியம் இன்னதென்று சொல்ல, அவர் அவ்விடத்திற்குப்போய்ச் சகல விவரங்களையும் அறிந்து கொண்டு வந்து 'ரிப்போர்ட்' செய்தார். தாசில்தார் பிள்ளையாண்டனுடைய 'ரிப்போர்ட்டை' உடனே நம்பவில்லையாயினும், தம்முடைய 'ஹெட் கிளார்க்' விவரமெல்லாம் சரியென்று சொன்னபின் அதிகச்சந்தோஷ மடைந்தார். இன்னொரு முறை ஒரு மிராசுதார் தாசில்தாரிடத்து வந்து தாம் கொடுக்க வேண்டிய வரி பாக்கி எவ்வளவென்று கேட்டார்.

அம் மிராசுதாரருக்கு 20-கிராமங்களில் நிலங்கள் உண்டு; அவையும் தாலூகா முழுதும் சிதறுண்டு கிடக்கும். ஆதலால் தாசில்தார் தமக்கு ஒன்றும் சொல்லத் தோன்றாது அருகில் நின்ற முத்துசாமி ஐயரைப் பார்த்தார். அவர் உடனே கணக்குப்பண்ணி வரிபாக்கி எவ்வளவென்று சொன்னார். பின் ஒத்துப்பார்த்த பொழுது கணக்குச் சரியாயிருந்தது. இந்தவிதமாக இரண்டொரு சங்கதிகளில் முத்துசாமி ஐயர் சாமர்த்தியத்தைக் கண்டு முத்துசாமி நாயக்கர் அவரிடத்து மிகுந்த பக்ஷமும் மரியாதையு முடையவரானார்; அன்றியும் அவர் முன்னுக்கு வரக்கூடிய பிள்ளையென்றும் உறுதியாக எண்ணினார்.

தாசீல்தார் தம்மை எவ்வளவுதான் மெச்சினாலுங்கூட அவர் கச்சேரியிலேயே தங்கிவிட்டால் முன்னுக்கு வருவது எப்படி என்று முத்துஸாமி ஐயருக்கு ஒருவித அதிருப்தி யுண்டாயிற்று. திருவாரூரில் ஒரு "ப்ரைமரி" பாடசாலை இருந்தது. தமக்கு ஓய்வான நேரங்களில் அப்பாடசாலைக்குச் சென்று, அவர் முதலாவது இங்கிலீஷ் அரிவரியைக் கற்றுகொண்டார். அவர் ஊக்கத்தை அறிந்த தாசீல்தார், அவருக்கும் தமது மருமகனுக்கும் இங்கிலீஷ் முதல் வாசகத்தைக் கற்பித்துக் கொடுத்தார்.

இடையிலேயே கொஞ்சம் நிறுத்திவைத்துப் பார்த்த பொழுது, தம் மருமகன் தான் விட்ட இடத்திலேயே இருக்க, பிராமணச் சிறுவர் புஸ்தகத்தை முடித்துவிட்டதாகக் கண்டார். அவர் விடாமுயற்சிக்கு இதனைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்! தாசீல்தார் அவரை நாகபட்டணத்திற்குத் தம் சகோதரரிடத்து அனுப்பி அங்குள்ள மிஷன் ஸ்கூலில் படிக்கச் செய்தார், முத்துசாமி ஐயர் அங்கு ஒன்றரை வருஷம் தங்கி நன்றாய்ப் படித்தார். அப்புறம் தாசீல்தாரே அவரை மதராஸ் ஹைஸ்கூலில் படிக்கும்படி சிபார்சுக் கடிதங்களோடு சென்னைக்கு அனுப்பினார். அந்நாள் கலாசாலைத் தலைவராயிருந்தவர் பவெல் துரை என்பவர்.

முத்துசாமி ஐயர் வெகு புத்திசாலி யெனப் பெயரெடுத்து வருஷந்தோறும் பரிசுகளும் 'ஸ்காலர்ஷிப்'களும் பெற்றார். அவருக்குக் கணிதத்தில் வெகு சாமர்த்திய முண்டு. வான சாஸ்திரத்தில் நல்ல பாண்டித்தியம் உண்டாயிற்று. தாசீல்தாருக்குச் சிறந்த நண்பராகிய ஸர். ஹென்ரி மண்டகமரியும், கலாசாலைத் தலைவர் பவெல் துரையும் முத்துசாமி ஐயரிடத்து அதிகப் பிரீதி வைத்து அவர்க்கு வேண்டிய உதவிபுரிந்தார்கள்.

தற்காலத்தில், மாணாக்கர்கள் தங்கள் போதகாசிரியர்களைச் சந்திப்பது அநேகமாய்க் கற்குமிட மொன்றிலேதான். அக்காலத்திலோ, காலாசாலைகளிற் கற்பதிலும் அதிகமாய், மாணாக்கர்கள் போதகாசிரியரோடு புறத்தே சம்பாஷணைகள் செய்வதனாற் கற்றுக் கொள்வது வழக்கமாயிருந்தது; மாணாக்கர்கள் சுருக்கமாயிருந்த அக்காலத்தில் அது சாத்தியமாயிருந்தது. முத்துசாமி ஐயர் பவெல் துரையிடத்தில் அம்மாதிரி கற்றதற்கு அளவில்லை. பவெல் துரை இரவு 9-மணி வரை அவரோடு வார்த்தையாடிக் கொண்டிருந்து, பின் தம் வண்டியில் அவரை மயிலாப்பூர் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டுத் திரும்புவாராம்.

### சன்மானங்கள்.

முத்துசாமி ஐயருக்கு எப்போதும் கல்வியிலேயே நாட்டம். அதனாலே அவர்க்கு அநேக சிறந்த பரிசுகள் கிடைத்தன. 1854-ஹூல் கல்விச் சங்கத்தார் 500-ரூபாய் பரிசு ஒன்று ஏற்படுத்தி, ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டு, இத

யைப்பற்றி இங்கிலீஷில் சிறந்த வியாசம் எழுதுபவர்க்கு அப்பரிசு அளிக்கப் படும் என்று விளம்பரப்படுத்தினர். அதனை முத்துசாமி ஐயரே பெற்றார். அச்சங்கத்தின் காரியதரிசிகளாயிருந்த ஸர். அலெக்ஸான்றர் அர்பத்நட் துரையும், ஹாலோவே துரையும் முத்துசாமி ஐயர் புத்தியை மிகவும் வியந்தனர். அந்த ஐந்நூறு ரூபாயையும் அவர் கையிற் கொடுக்கும்போது பவெல் துரை, 'இது நீர் பின் சம்பாதிக்கும் பெருஞ் சொத்துக்கு மூலதனமாகும்' என்றனர். முத்துசாமி ஐயர் தாம் சாகும்வரை அந்தத் தொகையில் ஒரு பைசா அளவும் செலவழித்தவரல்லர்.

(படிப்பும் உத்தியோகமும்)

முத்துசாமி ஐயரை ஸிவில் ஸெர்வீஸ் பரீக்ஷையில் தேரிவரும்படி இங்கிலாந்துக்கு அனுப்பவேண்டுமென்று பவெல் துரைக்கு நோக்கமுண்டு. ஆயினும், அவர்க்கு விவாகமாகிவிட்டபடியாலும், கப்பற் பிரயாணம் செய்ய அப்பொழுது சம்மதமில்லாமையாலும் தடையேற்பட்டது. தம் படிப்பு முடிந்தவுடன் முத்துசாமி ஐயர் ஹைஸ்கூலிலேயே மாதம் 60-ரூபாய் பெற்றுக் கொண்டு உதவி உபாத்தியாயராய் இருந்தனர்.

பின், ஸர் ஹென்ரிமண்ட்கமரி துரை அவரைத் தஞ்சாவூர்க் கலெக்டர் கச்சேரியில் 'ரெக்கார்ட் கீப்ப'ராய் நியமித்தார். 1856-ல் கல்வி விசாரணைக் கர்த்தர் ஸர் அலெக்ஸாண்டர் அர்பதநட் துரை அவரை மாதம் 150-ரூபாய் கொடுத்துத் தம் இலாகாவில் இன்ஸ்பெக்டராக வரவழைத்துக் கொண்டார். அந்த உத்தியோகத்தில் முத்துசாமி ஐயர் நெடுநாள் இருக்கக்கூடவில்லை. மதராஸ் கவர்ன்மெண்டார் வக்கீல் பரீக்ஷை யொன்று ஏற்படுத்தினார்கள். அந்தப் பரீக்ஷை அநேக இடங்களில் நடந்தது.

கும்பகோணத்தில் நடந்ததற்குப் பலர் வந்தார்கள்; தேரினவர்கள் மூவரே; முத்துசாமி ஐயர் முதல்தரமாகவும், திவான்பகதூர் ரகுநாத ராயர் அடுத்தவராகவும் தேறினார்கள். அவ்விடத்தில் நீதிபதியாயிருந்த பீச்சம் துரை பரீக்ஷையை நடத்தினார். பரீக்ஷையில் ஒரு பாகம், கோர்ட் ரெக்கார்டுகளை வைத்துக்கொண்டு தீர்ப்பு எழுதுதல். ஒரு கேஸின் ரெக்கார்டுகளை முத்துசாமி ஐயரிடதும் மற்றையோரிடத்தும் கொடுத்துத் தீர்ப்புச் சொல்லும்படி கேட்டபொழுது முத்துசாமி ஐயர் சொல்லிய தீர்ப்பு பீச்சம் துரை சொல்லிய தீர்ப்பாயே இருந்தது. உடனே துரைக்கு அவரிடத்தில் மிக்க மதிப்புண்டாயிற்று.

பீச்சம் துரை முத்துசாமி ஐயரைத் தரங்கம்பாடி முனிசீபாக நியமித்தார். சில நாளில், வேலையை அவர் நன்றாகப் பார்க்கிறாரென்று ஊர் எங்கும் பேர் உண்டாயிற்று. ஒரு தடவை, பீச்சம் துரை முன் அறிக்கையின்றிச் சென்று ஆபீஸ் சோதனைசெய்ய எண்ணித் தரங்கம்பாடிக்குப் புறப்பட்டு வந்தார். அவர் வந்ததை யறிந்து முத்துசாமி ஐயர் அவரைத் தம் ஆபீசுக்கு வரவேண்டுமென்றும், தாம் விசாரணை செய்வதைப் பார்க்கவேண்டுமென்றும் வருந்திக்கேட்டார். பீச்சம் துரை அவ்வாறே போய்ப் பார்த்து அதிக வியப்பும் ஆனந்தமும் அடைந்தார். தஞ்சாவூருக்குத் திரும்பிவந்து, 'முத்துசாமி ஐயர் என்னைப்போல ஒரு பெரிய நீதிபதியாக இருக்கத்தக்கவர்' என்றனர்.

(தொடரும்.)

வாசிஷ்டம்

# வைராக்ய ப்ரகரணம்

(பண்டித. K. V. தேவராஜ சாஸ்திரிகள்.)

ஸ்ரீ ராமர் குருகுலத்தில் வித்யாப்யாஸம் செய்து அரண்மனைக்கு வந்து சுகமாக வாஸம் செய்துகொண் டிருக்கையில், ஒரு நாள் ஸ்நாநம், போஜனம் முதலிய காரியங்களிலும் அவர் சிரத்தையில்லா மல் இருப்பதை அறிந்து தசரதர் அவரை வரவழைத்துக்கேட்க, தனக்கு தீர்த்த யாத்திரை செய்வதற்கு ஆசை யிருப்பதாகச் சொன்னார். அதைக் கேட்டு தசரதரும் லக்ஷ்மணனுடனும், சத்ருக்னனுடனும், தீர்த்த யாத்திரை செய்ய அனுமதித்தார். பிறகு ராமர் தம்பிகளுடன் அநேக தேசங்களில் சஞ்சாரம் செய்து, அநேக புண்ய தீர்த்தங்களைச் சேவித்து அயோத்திக்குத் திரும்பி வந்தார். மறுபடியும் முன்போலவே இருப்பதைக்கண்டு, வசிஷ்டர் ப்ருகு, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், கிரது, ச்யவனர், உத்தாலகர், உசீனரர், சரலோமர், விஸ்வாமித்திரர், நாரதர், வாமதேவர், வியாஸர், மரீசி, துர்வாஸர், காத்யாயனர் பரத்துவாஜர், ரீசிகர், சர்யாதி முதலிய ரிஷிகளும், தசரதர் முத லிய சக்கரவர்த்திகளும், அநேக சிற்றரசர்களும் நிறைந்த சபையில் ராமருக்கு உபதேசம் செய்தார். ஆகையினால் இதற்கு வாசிஷ்டம் என்று பெயர். அப் படி வசிஷ்டர் உபதேசம் செய்த இப்பெரிய வேதாந்த சம்மிதையை வால் மீகி தமது சிஷ்யராகிய பரத்துவாஜருக்கு பத்தொன்பது நாட்களில் உப தேசம் செய்தார். இதில் முப்பத்தீராயிரம் ஸ்லோகங்கள் இருக்கின்றன. இது 1. வைராக்ய ப்ரகரணம். 2. முமுக்ஷுவிவகார ப்ரகரணம். 3. உத்பத்தி ப்ரகரணம். 4. ஸ்திதி ப்ரகரணம். 5. உபசாந்தி ப்ரகரணம். 6. நிர்வாண ப்ரகரணம் என்று ஆறு ப்ரகரணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இது ஒரு சிறந்த அத்வைத கிரந்தமாம்.

இதை வாஸிஷ்டம் என்றும், யோக வாஸிஷ்டமென்றும், ஞான வாஸிஷ்டமென்றும், உத்தர ராமாயணமென்றும், மோக்ஷ ராமாயண மென் றும் சொல்லுவதுண்டு.

### முதல் ப்ரகரணம் முதல் சர்க்கம்

சுதீக்ஷ்ணர் என்ற வேதமோதிய அந்தணர் ஒரு அகத்திய முனியின் ஆச் ரமம் சென்று அவரை வணங்கி ஸ்வாமி:—"மோக்ஷத்திற்கு கர்மம் ஹேதுவா? ஞானம் ஹேதுவா? அல்லது இவ்விரண்டும் ஹேதுவா? என்று நிச்சயித் தருளவேண்டும்" என்று வினவ அகத்தியமுனி பக்ஷிகள் எவ்வண்ணம் இரண்டு இறகுகளாலும் ஆகாயத்தில் பறக்கின்றனவோ அவ்வண்ணம் மனி தர்கள் ஞானம் கர்மம் இவ்விரண்டு ஸாதனங்களாலும் மோக்ஷ மடைகிறார் கள். ஆகையால் ஞானமும் கர்மமும் இரண்டும் மோக்ஷத்திற்கு ஹேதுவாகு மென்பது நிச்சயம்.

இதற்கு ஆதாரமாக ஒரு கதை சொல்லுகிறேன். முன்காலத்தில் அக்னி வேஸ்யனுடைய குமாரர் காருண்யர் என்ற ஒரு அந்தணர் இருந்தார். அவர் நான்கு வேதங்களையும் ஆறு வேதாங்கங்களையும் குருவினிடம் நன்றாகக் கற்றுத் தமது ஆஸ்ரமத்திற்கு வந்து கர்மானுஷ்டானம் செய்யாமலிருந்தார். அவ்வாறு இருக்கும் தம் மகனைப்பார்த்து அக்னிவேஸ்யர் "ஏன் இப்படி கர்மானுஷ்டானம் செய்யாமலிருக்கிறாய்? கர்மம் செய்யாமல் எப்படி மோக்ஷமடைவாய்?" என்று கேட்கத் தமது பிதாவாகிய அக்னி வேஸ்யரை நோக்கி "வேதத்தில் சில வாக்கியங்கள் மனிதர்கள் உயிரோடிருக்கும் வரையில் அக்னிகோத்ரம் முதலிய கர்மங்களைச் செய்யவேண்டுமென்றும், சில வாக்கியங்கள் கர்மத்தால் பயனில்லையென்றும் த்யாகத்தால் மாத்திரம் மோக்ஷம் கிடைக்குமென்றும் சொல்லுகின்றன. இவ்விரண்டு விதமான வாக்கியங்களில் எதை நாம் அங்கீகரிப்பது என்று ஐயங்கொண்டு மௌனமாக விருக்கிறேன்" என்று சொல்ல அக்னி வேஸ்யரும் தமது புத்திரரைப் பார்த்து, "மகனே இதற்கு ஆதாரமாக ஒரு கதை சொல்லுகிறேன்; கதையைக்கேட்டு ஐயம் தெளிந்து, நீ கர்மானுஷ்டானம் செய்வாயாக. அப்ஸரஸ்திரீகளில் ஒருத்தியாகிய சுருசி என்பவள் ஹிமயமலையின் உச்சியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பொழுது விமானத்தில் ஏறிச் செல்லும் தேவதூதனைக் கண்டாள். 'ஓ தேவதூதனே! நீ எங்கு செல்லுகிறாய்? என்று கேட்க, தேவதூதன் சுருசியை நோக்கி 'ஓ சுருசியே! பூலோகத்தில் அரிஷ்டநேமி என்ற அரசன் தனது மகனுக்குப் பட்டம் சூட்டித் தான் இராஜ்ஜியத்தை வெறுத்து கந்தமாதன மலையில் தவம் புரிந்து வருகிறான்' என்று மறுமொழி உரைத்தான். அதைக் கேட்டு சுருசியும் அங்கு நடந்த சமாசாரத்தை எனக்குச் சொல்லுவாயாக என்று கேட்டாள். தேவதூதன் 'எனது ஸ்வாமியாகிய இந்திரன் என்னைப்பார்த்து 'அரிஷ்டநேமி அரசன், கந்தமாதன மலையில் தவம் புரிந்து வருகிறான். அங்குச் சென்று அவனைத் தரிசித்து இந்திரனிடம் செல்லுகிறேன்' என்று மறுமொழி உரைத்தான். அதைக்கேட்டு சுருசியும் 'அங்கு நடந்த சமாசாரத்தை எனக்கும் சொல்லுவாயாக' என்று கேட்டாள். தேவதூவன் எனது சுவாமியாகிய இந்திரன் என்னைப்பார்த்து அரிஷ்டநேமி அரசன், கந்தமாதனமலையில் தவம் புரிந்து வருகிறான். அங்குச் சென்று, அவனை விமானத்தில் ஏற்றி இங்கு அழைத்துவா' என்று சொன்னார். அவருடைய உத்திரவைச் சிரவில் வகித்து அரசனிடம்சென்று இந்திரன் சொன்ன சமாசாரத்தைத் தெரிவிக்க அவனும் என்னைப்பார்த்து 'ஓ தேவதூதனே! ஸ்வர்க்கத்திலிருக்கும் குணதோஷங்களை எனக்குச் சொல்லும். அவைகளை யறிந்த பிறகு அங்கு வருவதா வேண்டாமா என்று யோசிப்பேன்' என்று சொன்னான். அதைக்கேட்ட தேவதூதன் 'ஸ்வர்க்கத்தில் அதிக புண்ணியத்தால், அதிக சுகமும், குறைந்த புண்ணியத்தால் குறைந்த சுகமும அடைகிறார்கள். ஸ்வர்க்கத்திலும் புண்ணியத்திற்குத் தக்கபடி பலத்தில் தாரதம்யம்' என்று சொல்ல அப்பேர்ப்பட்ட ஸ்வர்க்கத்தை நான் விரும்பேன். கொடுமையாகத் தவம் செய்து இக்காயத்தை, பாம்பு தனது சட்டையை விடுவதுபோல விட்டு விடுகிறேன். ஆனதினால் நீவிமானத்துடன் திரும்பிப் போவாயாக' என்று சொன்னான். இதைக்கேட்டு தேவதூதன் விமானத்தில் ஏறி விரைவாக விண்ணுலகம்வந்து, இந்திரனிடம் விருத்தாந்தம் தெரிவிக்க, இந்திரனும் தேவதூதனைப் பார்த்து, 'நீமறுபடியும் அவனிடம் சென்று அவனை வால்மீகிரிஷியின் ஆஸ்ரமம் அழைத்துச் செல். வால்மீகி ரிஷியைப் பார்த்து ஸவர்க்கத்திலும் விருப்பமில்லாத

அரசனுக்கு தத்வோபதேசம் செய்யுமாறு சொல்' என்று சொன்னர். பிறகு தேவதூதன் அரசனுடன் ஆஸ்ரமம் சென்று வால்மீகியை வணங்கினன். அரசனும் 'ஸ்வாமி! இப்பிரபஞ்சமாகிய துக்கக்கடலில் மூழ்கி யிருக்கும் என்னைத் தாங்கள் கடத்திவிடவேண்டும் என்று சொன்னன். அதைக்கேட்டு வால்மீகி முனிவரும் 'ஓ அரசரே வசிஷ்டராம சம்வாதமாகிய இக்கதையைக் கேட்டுத் துக்கத்தைப் போக்கிக் கொள்வாயாக?'' என்றூர்.

பிறகு தசரதர் சுமந்திரன் முதலிய மந்திரிகளுடன் மந்திராலோசனை செய்து ராமருக்குக் கல்யாணம் செய்து வைப்பதாக நிச்சயித்து அவரை வரவழைத்து அவர் ஒவ்வொருநாளும் ஏதோ சிந்தையிலாழ்ந்து வருத்த மடைந்து இருப்பதைக்கண்டு ''ஓ ராமா! உனக்கு இப்பெரிய கவலை உண்டாகக் காரணம் என்ன?'' என்று பன்முறை கேட்டபோதிலும் ஒன்றும் பதில் செல்லாமல் மௌனமாக இருந்தார்.

இவ்வாறு ராமர் வருத்தப்படுவதைக் கேட்டு அந்தப்புர ஸ்திரீகளும் அயோத்தி நகரில் வசிக்கும் ஜனங்களும் ஆறாத்துக்கம் அடைந்தனர். இத்தருணத்தில் தசரத மஹாராஜனைப் பார்க்க விஸ்வாமித்திரர் அயோத்திக்கு வந்தார். தசரதர் தாமாகவே சென்று விஸ்வாமித்திரரை அழைத்து வந்து ஆசனத்தில் அமர்த்தி அர்க்யபாத்யாதிகளால் பூஜைசெய்து வணங்கி நின்று ''சுவாமீ! தங்களது வரவால் நானும் எனது நகரமும் புனித மாக்கப்பட்டோம். தாங்கள் வந்த காரியம் என்ன? உத்திரவிட வேண்டும் என்று சொல்லி அஞ்ஜலி செய்து நின்றூர். அதைக்கேட்டு விஸ்வாமித்திரரும் அரசனுக்கு ஆசி கூறி 'ஓ அரசே! நான் ஒரு யாகம் செய்யப் போகின்றேன். அதற்கு இடையூறாக மாயாவிகளான அநேகம் அரக்கர்கள் ரக்தம் மாமிஸம் முதலியவற்றை வர்ஷித்து எனது யாகசாலையை அசுத்தம் செய்கின்றனர். ஆகையால் அவ்வரக்கர்களைக் கொன்று எனது யாகத்தைக் காப்பாற்றத் தங்களது மூத்தகுமாரனை ராமனை என்னுடன் அனுப்பித் தரவேண்டும் என்று கேட்டார்.

(தொடரும்.)

# பிழைத் திருத்தம்.

சென்ற வைகாசிமீ ''ஆனந்த போதினி'' சஞ்சிகை 820-ம் பக்கத்தில்

வானடும் மண்ணு மெல்லாம் நடுநெடுவயிரத் தோளான்
நானடு பகைஞ ரெல்லாம் நடுவரென்றதற்கு நாணன்
வேனடு நெடுங்கட் செவ்வாய் மெல்லியல் மிதிலைவந்த
சானகி நடுவ னென்றே நாணத்தால் சாம்பு கின்றான்.

என்ற செய்யுளை அடியிற்காணுமாறு திருத்தி வாசித்துக்கொள்ளும்படி நேயர்களை வேண்டிக்கொள்ளுகின்றோம்.

வானகும் மண்ணு மெல்லாம் நகும்நெடுவயிரத் தோளான்
நானகு பகைஞ ரெல்லாம் நகுவரென் றதற்கு நாணன்
வேனகு நெடுங்கட் செவ்வாய் மெல்லியல் மிதிலைவந்த
சானகி நகுவ னென்றே நாணத்தால் சாம்பு கின்றான்.




## "அஜீர்ண நிவாரணி"

பிச்சைக்காரன்:—'அஜீர்ணத்திற்கு என்னிடம் அருமையான மருந்திருக்கிறது''

பெரிய மனிதர்:—''ஓ! அப்படியா? என்ன மருந்து?''

பிச்சைக்காரன்:—''குறைந்த ஆகாரமே. அஜீர்ணம் உண்டாகும பக்ஷண பதார்த்தங்களைச் சாப்பிடாதீர்கள். அவைகளை ஏழைகட்குக் கொடுங்கள்''

பெரிய மனிதர்:—''அந்த ஏழைகள் யார்?''

பிச்சைக்காரன்:—''என்னைப் போன்றவர்களே!''

* * *

## "நியாயமான வாடகை"



பிரயாணி:—''இங்கிருந்து என்ன கேட்கிறாய்?''

கண்டக்டர்.—''இரண்டு பேருக்கும் ஐந்து ரூபாய்''

பிரயாணி:—''அப்பப்ப! அது வெகு அதிகம். அநியாயம் பேசாதே!''

கண்டக்டர்:—''அப்படியானால் தலைக்கு இரண்டரை ரூபாய் கொடுத்து விடுங்கள்''

பிரயாணி:—''அப்படிக் கேள். நியாயமான வாடகை கேட்டால் நான் ஒப்புக்கொள்ளுவேன்.''

---

**ஸ்நேகம் முறியும்போல் இருந்தால் சிந்தையிலுள்ளதைத் திறந்து கூறி விட்டால் போதும்-ஸ்நேகம் முறியாது நின்றுவிடும்.**



"144—தடை யுத்தரவு"

ஒருவர் தம்முடைய குழந்தைகள் எல்லாரையும் அழைத்துக்கொண்டு கடற்கரைக்குச் சென்றார். அப்பொழுது 144 தடை யுத்தரவு அமலில் இருக்கிறது.

கான்ஸ்டேபிள்:—"ஐயா! உம்மை அரஸ்டு செய்திருக்கிறேன்"

அவர்:—"ஐயோ! நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே"

கான்ஸ்டேபிள்:—"இத்தனை பேரைக் கூட்டம் போட்டுக்கொண்டு போகிறீர்களே—ஏதேனும் மீட்டிங்கு போடப் போகிறீர்களோ என்று எண்ணி அரஸ்டு செய்தேன்."

***

"மணி பார்த்து வைத்தல்"



செட்டியார்:—"நீ தபாலாபீஸுக்குப் போய் வரும்போது மணி பார்த்து வைத்துக் கொண்டு வா."

குமஸ்தா.—"என்னிடம் கடியாரம் இல்லையே"

செட்டியார்:—"கடியாரம் இல்லாவிட்டால் என்ன ஓய்? ஒரு கடுதாசியிலாவது குறித்துக் கொண்டு வரக்கூடாதா?"

***

பணத்தினிடம் உள்ள ஒரு மகா கெட்ட குணம் என்னவென்றால்-அது அவசியமான சமயத்தில் அகப்படாமல் போவதே.

***

"கெட்டிக்காரன்"





தகப்பனார்:—"என்டா கண்ணு! உங்கள் வகுப்பில் நல்ல கெட்டிக்காரன் யார்?"

பையன்:—"கெட்டிக்காரனா? நொண்டிச் சுப்பன்"

தகப்பனார்:—"எப்படி?"

பையன்:—"அவன் பூகோள புஸ்தகத்தை வைத்து மறைத்துக் கொண்டே மாம்பழங்களையெல்லாம் சாப்பிட்டு விடுகிறான்."

---

ஷேக்ஸ்பீயர் என்னைவிட அதிக உயரமுள்ளவரே. ஆனால் நான் அவருடைய தோள்களின்மேல் அல்லவோ நிற்கின்றேன்.

## "குற்றம் ஒப்புக் கொள்ளல்"



மனைவி:—(புருஷனுடன் பிறந்த அகம் சென்று திரும்பும்போது) "நீங்கள் என்ன செய்தீர்கள் என்று உங்களுக்கு விளங்க வில்லையா?"

புருஷன்:—"இல்லை. அது தப்பு என்று ஒப்புக் கொள்ளுகிறேன்—சங்கதி என்ன?"

***

## "வேகம்"



கான்ஸ்டேபிள் கையைக் காட்டி மோட்டாரை நிறுத்தினன்.

பெரியமனிதர்:—"நான் மணிக்குப் பத்து மைல் வேகத்தில்தானே விட்டுக்கொண்டு வருகிறேன் - ஏன் நிறுத்தினாய்?"

கான்ஸ்டேபிள்:—"அது வாஸ்தவந்தான். எனக்குக் கொஞ்சம் பெட்ரோல் வேணும் பெல்ட சுத்தம் செய்ய"

***

## "பதிபக்தி"



ஒரு ஸ்திரீ ஒரு வீட்டுக்கு நேரே நின்று கூச்சல் போட்டு அழைத்தாள்.

வீட்டுக்காரி:—"என்ன சங்கதி?"

வந்தவள்:—"ஐயோ உன் வீட்டுக்காரர் மீது வண்டியேறி விட்டது. ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்"

வீட்டுக்காரி:—இதற்குத்தானா இவ்வளவு கூச்சல்? நான் உன் கடன் கேட்க வந்திருக்கிறாயோ என்னவோ என்று பயந்து விட்டேன்"

---

துக்கத்தில்-இரண்டு இதயங்களைத் தோழமை இறுக்கமாய்ப் பிணிப்பது போல் வேறெதுவும் பிணிப்பதில்லை.






# கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(தொகுதி 16, 957-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

தீ வீட்டின் மேல் பக்கம் கிளம்பவில்லை. ஆயினும், வீட்டி லிருந்தோ ரனைவரும் வெளியில் ஓடிவந்து விட்டார்கள். வீதி யில் ஜனக்கூட்டம் நிறைந்துவிட்டது. ஆனந்தஸிங் எதிரில் இருக்கும் ஓட்டலின் முன் நின்று ஜாக்கிரதையாய்க் கள்ளரைக் கவனித்தான்.

அவன் கருதியபடியே வீதியில் குழப்பம் அதிகமான வுடனே கள்ளர் மூவரும் வெளியில் வந்தார்கள். ஆனந்தஸிங் சற்றும் அச்சமின்றி அவர்கள் பின்னல் சமீபத்தில் சென்று நின்றான்.

கிட்டு மெதுவாய்க் குசுகுசுவென்று "இதோடு இக்கதை முடிவாகிறது" என்றான்.

பிச்சன்.—ஆம் உண்மையே. நாம் இன்னும் சற்றுநேர மிருந்து நோட்டு களைத் தேடி யிருந்தால் அகப்பட்டே யிருக்கும்.

கிட்டு:—அது முட்டாள்தனம். இருக்கிற விடத்தில் அது இன்னும் ஏராளமாயகப்படும்.

பிச்சன்:—ஆனல் அது கஷ்டம்போலல்லவோ யிருக்கிறது.

கிட்டு :—ஒரு கஷ்டமுமில்லை. அதைத்தடுக்கக்கூடிய ஓரே ஆசாமி-அவன் இருக்குமிடம் நமக்குத் தெரியும்.

பிச்சன்:—நாம் முன்னமே அங்கு சென்றிருக்கிறோம். இப்போதே நான் உன்னோடு கூடவருகிறேன்.

குள்ளன்:—நானும் வருகிறேன். இச்சமயம் நாமே பூராய் முடித்துவிட வேண்டும். இன்றேல் நமக்குப் பிராணபத்து.

கிட்டு:—ஆம், ஆம்; தெரியும். புறப்பட வேண்டியதே.

இவையாவுங் கேட்ட ஆனந்தஸிங் "ஓகோ நண்பர்களே! மறுபடி வரு கிறீர்களா! வாருங்கள். வாருங்கள் இச்சமயம் தப்பாமல் உங்களுக்குப் பெரிய விருந்தளித்து, மெயில் வண்டியில் முதல் வகுப்பு பிரயாணச்சீட்டு வாங்கி யுங் களை மேலிடம் அனுப்பி விடாவிட்டால் நான் கிருஷ்ணஸிங் புத்திரனல்ல. நீதியும், என் தந்தையும், ஆண்டவனும் எனக்கு உதவி செய்வார்கள்" என்று

---

இருளின் இடையிலேயே தெளிவாய்த் தெரியும் "பாஸ்பரஸ்" என்னும் பொருளைப் போன்றது நட்பு.

தனக்குள் கூறிக்கொண்டு அதைவிட்டு நேராய் தன் வாசஸ்தலத்திற்குச் சென்றான்.

ஆனந்தவிங் வீட்டிற்குள் நுழைந்ததே அங்கு இராஜவேல் வந்திருப்பதைக் கண்டு முதலில் சற்று வெறுப்பும் அதிருப்தியு மடைந்தான். மறுபடி, இவன் வந்தவரையில் இவனை யொரு உதவியாய் வைத்துக் கொள்வதும் அனுகூலமாகுமென்று நினைத்து, "நண்பனே! மற்ற சங்கதிகள் பின்னால் பேசிக்கொள்ளலாம். இப்போது அனுபவமாய் நீ எனக்கு உதவி செய்யக் கூடிய சந்தர்ப்பம் நேரிட்டிருக்கிறது. செய்வாயா?" என்றான்.

இராஜவேல்:—"தடையின்றி செய்வேன்" என்றான்.

ஆனந்:—இப்போது மூன்று பேர் என்னைக் கொல்ல வருகிறார்கள். நீ கூடுமானால் உதவி செய். இன்றேல் வேண்டாம்.

இராஜ:—எப்படியாயினும் நீ ஒருவர் உதவியாயினும் கோரவேண்டு மல்லவா. நானே அந்த உதவியைச் செய்கிறேன்.

ஆனந்:—அப்படியல்ல. நான் ஒரு ஏற்பாடு எனக்குள் உத்தேசித்துக் கொண்டிருக்கிறேன். நீ இப்போது வந்திருப்பதால் உன்னைத் துணை சேர்த்துக்கொள்ள நினைத்தேன்.

இராஜவேல்:—கட்டாயம் உதவியாயிருக்கிறேன்.

ஆனந்:—"சீக்கிரம் இப்போதிருக்கும் உன் மாறுவேடத்தை ஒரு நொடியிற் களைந்துவிடு" என்றான்.

உடனே ஆனந்தவிங் ஒரு பெரிய நிலைக்கண்ணாடியின் முன் அவனை உட்கார வைத்து இரண்டொரு நிமிடத்திற்குள் அவனை யொரு முரட்டு மனிதன்போல் உருமாற்றி விட்டான். அவ்வுருவம் பிச்சன் உருவமே. ஆனால் இராஜவேலுக்கு அது தெரியாது.

இராஜவேல்:—"இனி நான் செய்ய வேண்டிய வேலை யென்ன?" வென்றான்.

ஆனந்:—நீ யொரு துப்பறிபவன். உன் உருவம் கள்ளரின் ஒருவன் உருவமே. ஒரு சமயம் அவனே யுன்னைக் காண வரக்கூடும். ஆனால் அப்படி நடக்குமென்று நான் நினைக்கவில்லை. நான் உன் சமீபத்திலேயே மறைந்திருக்கிறேன். நீ பயப்பட வேண்டிய காரணமேயில்லை. எப்படியும் கொஞ்சம் சம்பாஷணை நேரிடும். கள்ளர் முதலில் உன்னை நானென்றே நினைத்துக் கொள்வார்கள். நீ சற்றும் பயங்காட்டாது தைரியத்தோடு அவர்கள் கேள்விகளுக்கு அசட்டையாய்ப் பதில் கூறவேண்டும். அவ்வளவே; செய்கிறாயா?

இராஜவேல் "ஆகா தடையின்றி" என்றான்.

இருவரும் உடனே கள்ளர் வரவிற்கு ஆயத்தமா யிருந்தார்கள் சற்று நேரத்திற்குள் தாழ்வாரத்தின் வழியே ஒருஆள் மெதுவாய் வரும் சத்தம் கேட்டது. ஆனந்தவிங் காலடி சத்தத்தாலேயே யாரென்றறிந்து கொண்டு, இராஜவேலைச் சீண்டி இரகசியமாய் "அவன் கிட்டு; எச்சரிக்கை; பயப்படாதே

---

புகழை அலக்ஷியம் செய்பவர் அதை அடையத் தகுதியுடையவரா யிருத்தல் அரிது.

யென்று கூறிவிட்டு சுவரில் தொங்கும் திரைச்சீலையின் பின் மறைந்து கொண்டான்.

மறு நிமிடம் கதவு தட்டப்பட்டதும் கிட்டு புன் சிரிப்புள்ள முகத்தோடு அறைக்குள் வந்தான். வந்தவன் இராஜவேலின் மாறுவேடத்தைக் கண்டதும் நகைத்து, "ஓ! வேலைக்கு ஆயத்தமாயிருப்பதாய்த் தெரிகிறது உட்காரலாமே" வென்று கூறிக்கொண்டே எதிரிலிருந்த நாற்காலியி லுட்கார்ந்து கொண்டான்.

---

# விமோசனம் எப்பொழுது?



நான்கு கிழவர்கள் சீட்டாடிக்கொண் டிருக்கிறார்கள். ஒரு சமூகத் தொண்டர் இவர்கட்குப் பத்திரிகை படித்துக் காட்டவேண்டும் என்று பிரயத்தனம் செய்தார். அவர்கள் செவி சாய்க்கவில்லை.

சமூகத் தொண்டர்:—"என்ன தாத்தா! வெள்ளைக்காரர்கள் ஆகாய விமானங்களில் பறக்கிறார்கள்—செத்தவர்களையும் பிழைக்கவைக்கிறார்கள். நம் நாடும் நாமும் எப்படி யிருக்கிறோம்?"

ஒரு கிழவர்:—"சரி! சரி போடா! உனக்கு வேறு பிழைப்பில்லைபோல் இருககிறது. வெள்ளைக்காரன் பறக்கிறானும்! பிழைக்க வைக்கிறானும்! அவன் புதிதாகச் சாதித்தது இம்மியும் இல்லை. போகர் ஏழாயிரத்தில் சொல்லாத விமானங்களா? திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கவில்லையா? சுந்தரர் முதலையுண்ட பாலனை அழைக்கவில்லையா? இதையெல்லாம் விடவா வெள்ளைக்காரன் சாதித்துவிட்டான்! கொஞ்சம் புத்தியைச் செலுத்தினால் எல்லாம் தானே வருகிறது!..................என்ன ஜாக்கியா இறக்கம்?"




### அதிசய ஊஞ்சல்:—

அமெரிக்காவில் விஞ்ஞான சாஸ்திர அறிவு அதிகம் உயர்ந்த நிலையில் இருக்கின்றது. அங்கு ஒருவித சக்தியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். குழந்தைகளை ஊஞ்சலில் படுக்க வைத்துவிட்டுத் தாய்மார் அக்கம் பக்கம் வீடுகளுக்குச் சென்றால் அச்சக்தியினால் ஏற்பட்ட ரேடியோவின் மூலம் குழந்தை அழுவதைக் கேட்கலாம். மேலும் டெலிவேஷன் கருவி மூலம் அதிக தூரத்திலிருந்தும் அக்குழந்தைகளைக் கவனிக்கலாம். அக்குழந்தை படுக்கும் உஞ்சலுக்கு அச்சக்தியை இணைக்கவேண்டும். இதை ஒரு இடத்தில் அமைப்பதற்கு ஏழாயிரம் பவுன் செலவு பிடிக்குமாம். அமெரிக்காவில் பல இடங்களில் இதை அமைக்க ஏற்பாடுசெய்து வருகிறார்கள்.

### செம்பினால் அமைக்கும் கட்டடம்:—

உலகில் நாகரிகம் அதிகப்படவே புதுமாதிரியான வீடுகளையெல்லாம் கட்டி வருகிறார்கள். அமெரிக்காவில் பெரிய கட்டடங்களையும் அப்படியே பெயர்த்துச் செல்லலாம். ஆகாய மளாவக்கூடியதும், ஒரு நகரம் முழுவதும் கூடியிருக்கக் கூடியதுமான கட்டடங்கள் கட்டப்படுகின்றன. இப்போது ஜர்மன் தேசத்தார் பர்லின் நகரில் விசித்திரமான வகையில் செம்பினால் வீடு முழுவதையும் அமைக்க ஏற்பாடு செய்து வருகின்றனர். இதனால் எவ்வித காற்றுக்கும் மழைக்கும் அது அஞ்சவேண்டியதில்லையாம். தினசரி ஆயிரக் கணக்கான ஜனங்கள் இக்கட்டடம் கட்டப்படுவதைப் பார்த்து ஆனந்திக்கின்றனர்.

### செத்தால் சந்தோஷப்படும் ஜனங்கள்:—

இங்கிலாந்தில் ஒரு பாகமாகிய ஸஸ்ஸெக்ஸ் என்னுமிடத்தைச் சேர்ந்த லாக்ஸ்வுட் பிரதேசத்தில் விசித்திரமான ஜனங்கள் வசிக்கின்றனர். அவர்கள் கொக்கோ அதிகமாகப் பானம் செய்வதால் அவர்களுக்கு 'கோக்லர்ஸ்' என்று பெயர். அவர்கள் வாழ்க்கை விசித்திரமானது கலியாணம் என்றால் அவர்களுக்கு வருத்தத்தைத் தருமாம். ஒருவன் இறந்தால் அதைக் கண்டு சந்தோஷமடைந்து களிக்கின்றனர். அவர்கள் தற்கால நாகரிகக் களியாட்டங்களைச் சிறிதும் விரும்புவதில்லை. இறந்தால் மறுபிறவியில் ஒரு நல்ல உயர் குலத்தில் உதிப்பதாகக் கருதுகின்றனர்.

### உலகில் பெரிய நந்தவனம்:—

ஜர்மன் தேசத்திலுள்ள மக்லன்பர்க் என்னும் நகரிலுள்ள பிரசித்தி பெற்ற 'நந்தவனத்தில் பதினெட்டாயிரம் செடிகளைவைத்து வளர்க்கப் படுமென்றும் பின்னர் அவற்றைச் சிறு நந்தவனங்களுக்கும் ரயில்வே ஸ்டேஷன்களுக்கும் அழகுக்காக வைக்கப்படுமென்றும் தெரிகிறது.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

## ப்ரஜோற்பத்தி௵ ஆவணி மீ—கலியுகாதி 5033, சாலிவாகனம் 1854, பசலி 1341, கோல்லமாண்டு 1107, ஹிஜரி 1350, இங்கிலீஷ் 1931௵ ஆகஸ்டு மீ—செப்டம்பர் மீ

| ஆவணி மீ | ஆகஸ்டு மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங் | சது17-20 | அஸ்36-28 | சி36-28பி | நாக சதுர்த்தி, மாச சதுர்த் [தி விரதம் |
| 2 | 18 | செவ் | பஞ்10-23 | சித்31-55 | சித்60 | கரிநாள், சஷ்டி, நாகபஞ்சமி |
| 3 | 19 | புதன் | சஷ்4-25<br>சப்59-38 | சுவா28-28 | சித்60 | சூரிய சஷ்டி, அவமாகம், சர்வ முகூர்த்தம் செய்ய |
| 4 | 20 | வியா | அஷ்56-13 | விசா26-10 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 5 | 21 | வெ | நவ54-8 | அனு25-15 | சி25-15மர | வரலக்ஷ்மீ விரதம் |
| 6 | 22 | சனி | தச53-10 | கே25-28 | சித்60 | ததி விரதாரம்பம் |
| 7 | 23 | ஞா | ஏகா53-33 | மூல27-8 | அ27-8சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 8 | 24 | திங் | து55-18 | பூரா29-48 | மர60 | தாமோதர துவாதசி |
| 9 | 25 | செவ் | திர57-55 | உத்33-40 | அ33-40சி | கரிநாள், பிரதோஷம் |
| 10 | 26 | புதன் | சது60 | திரு38-38 | சி38-38பி | ருக் உபாகர்மம் |
| 11 | 27 | வியா | ச ○ 1-45 | அவி44-33 | சி44-33மர | பௌ○, யஜுர் உபாகர்மம், ஆவணியவிட்டம் |
| 12 | 28 | வெ | பௌ6-38 | சத51-20 | சித்60 | |
| 13 | 29 | சனி | பிர12-13 | பூர58-48 | மர58-48சி | |
| 14 | 30 | ஞா | துதி18-28 | உத்60 | அமி60 | |
| 15 | 31 | திங் | திரி24-58 | உத்6-30 | சித்60 | |
| 16 | 1 (1931௵ செப்டம்பர் மீ) | செவ் | சது31-25 | ரே14-28 | சித்60 | |
| 17 | 2 | புத | பஞ்37-23 | அஸ்21-50 | மர21-50சி | |
| 18 | 3 | வியா | சஷ்42-18 | பர28-25 | சி28-25மர | |
| 19 | 4 | வெ | சப்45-48 | கி✲33-43 | சி33-43மர | |
| 20 | 5 | சனி | அஷ்47-33 | ரோ37-23 | அ37-23சி | |
| 21 | 6 | ஞா | நவ47-15 | மிரு38-58 | சித்60 | |
| 22 | 7 | திங் | தச44-48 | திரு38-43 | சி38-43அ | |
| 23 | 8 | செவ் | ஏகா40-28 | புன36-23 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 24 | 9 | புத | து34-28 | பூச32-23 | சித்60 | விவாகம் |
| 25 | 10 | வியா | திர27-5 | ஆயி27-3 | சித்27-3அ | மாத சிவராத்திரி |
| 26 | 11 | வெ | ச ● 18-48 | மக20-40 | மர20-40சி | சர்வத்திர அமாவாசை |
| 27 | 12 | சனி | அமா9-48 | பூர13-40 | சி13-40மர | 8-க்குள் மழை |
| 28 | 13 | ஞா | பிர0-33<br>துதி51-30 | உத்6-28<br>அஸ்59-28 | அமி60 | பாத்ரபத சுத்தம், ஸாமோ உபாகர்மம், கரிநாள், |
| 29 | 14 | திங் | திரி43-5 | சித்53-8 | பி53-8அமி | சோடசோம விரதம் |
| 30 | 15 | செவ் | சது35-35 | சுவா47-53 | சி47-53மர | விநாயக சதுர்த்தி |
| 31 | 16 | புத | பஞ்29-23 | விசா43-50 | சித்60 | தானியம் செலவிட |

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| | 5-சிம்ம-சுக்<br>21-துலா-செ<br>29-கன்-சுக் | | குரு சுக் |
| | | | சூரி புத |
| சனி | | | கே செவ் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.